ஸரஸ்வதி மஹால் வெளியீடு எண் : 105



# ஞானசாரம்

(மூலமும், உரையும்)






தஞ்சை மகாராஜா சரபோஜி மன்னர்
ஸரஸ்வதி மஹால் நூல் நிலையம்
தஞ்சாவூர்.

கி. பி. 1962] சுபகிருது ஆண்டு [சகம் 1884
விலை ரூ. 2—00

உ

# ஞானசாரம்

(மூலமும், உரையும்.)

பதிப்பாசிரியர்:

பண்டித, வித்துவான்,

**இராம. கோவிந்தசாமி பிள்ளை,**

ஓய்வு பெற்ற தமிழ்ப் பேராசிரியர்.



பதிப்பித்தவர்:

நிர்வாக கமிட்டியினருக்காக

**சே. கோபாலன் அவர்கள்**

கௌரவ காரியதரிசி.



**1962**

[சுபகிருது ஆண்டு]

# முன்னுரை.

சோறுடைத் தென்னுஞ் சோழவள நாட்டில் சமய குரவர்களில் முதல்வராகிய ஞானசம்பந்தர் அவதரித்தருளிய சீர்காழிப்பதியில், சம்பந்தப்பெருமானின் நல்லருள் பெற்ற வள்ளலாரின் வழித்தோன்றலில் ஒருவர் இயற்றியதே இந்த ஞான சாரம் என்னும் சைவசித்தாந்த உண்மை விளக்கும் நூலாம். இது எமது மன்னர் சரபோசியின் சரசுவதிமகால் நூல் நிலையத்தின் சுவடி எண். 208 (m)/837 ஆகும்.

நூற்றுப்பதினெட்டுப் பாடல்களையுடைய இந் நூலில் மூலம் மட்டுமே இருந்தது. இதனை உரையுடன் அச்சிட வேண்டுமென அரசினர் பணித்தனர். ஆகவே இந் நூலை ஏட்டுச்சுவடியினின்றும் நல்ல முறையில் படியெடுத்து அதற்கு உரையும் வகுத்து, நன்மக்கள் உய்யுமாறு ஆக்க முயன்று பதிப்பித்தவர், பண்டித வித்துவான் திரு. இராம. **கோவிந்தசாமி பிள்ளை** யவர்களாவர்.

இப்பணியினைச் சீரிய முறையில் வெளியிடப் பேருதவி செய்த மத்திய அரசினர் அவர்கட்கும், தமிழ் நாட்டு அரசினர் அவர்கட்கும், இந் நூலின் பதிப்பாசிரியர் அவர்கட்கும், எங்கள் நன்றி உரித்தாகுக.

வள்ளல் பெருமான் வண்டமிழ் வாழ்க.

இங்ஙனம்,

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜி
ஸரஸ்வதி மஹால் நூல்நிலையம்
தஞ்சை 8—8—63

O. A. நாராயணசாமி B. A., B. L.
கௌரவக் காரியதரிசி.

# ஞானசாரம் பொருள் அட்டவணை.



## உள்ளுறை





உ

# ஞானசாரச் சிறப்பு

அகவற்பா

"திருத்தலம் மூர்த்தி தீர்த்தம் என்னும்
மூன்ருன் முதன்மை முற்றிய பதிதனுள்
பன்னிரு நாமம் பரித்த பெருமை
தனக்கே யுரிய தண்டமிழ்க் காழியுள்
ஏணி தாங்கிய தோணி யப்பரும்
அட்டமா சித்திக ளளித்தருள் சட்டை
அப்பரும் பிரம புரீசரும் ஒன்றிடும்
அதனை யறிந்துளோர் இதமுறு குருவும்
இலிங்கசங் கமமா யிலகிடு நிலையென
யியம்பினர் இயற்றமிழ் ஞானசம் பந்தர்
அவதரித் தருளிய தவமுறு நகரில்
வள்ளல் வழிவரு தள்ளரு ஞான
வள்ளல் கண்ட வொள்ளிய தமிழாம்
முப்பொரு ளுணர்த்தும் திப்பியக் கலையாம்
ஞான சாரமென் நன்னூ லுணர்வோர்
வாழி நிலமிசை வளமெலா முற்றே"

இராம. கோவிந்தசாமி பிள்ளை



# முகவுரை.

## காப்பு

திருவுங் கல்வியுஞ் சீருந் தழைக்கவும்
கருணை பூக்கவுந் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நமதுள்ளம் பழுக்கவும்
பெருகு மாழத்துப் பிள்ளையைப் பேணுவாம்.

கடலாற் சூழப்பட்ட இந்நிலவுலகின்கண் காணப்படும் உயிர்த்தொகைகள் இருவகைப்படும் அவை, இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளும் என்பன. இவ்விருதிறனும் அறிவுவகையான் அறுவகைப்படும், ஆறறிவுற்ற மக்கட் பிறப்பினர் மூவகையராவர். கடவுள் கொள்கையும், கொள்கையின்மையும், இவ்விரண்டுமிலாத்தன்மையும் ஆயவகையால் முத்தொகுதியினராயினர். கடவுட் கொள்கை எளிதினில் வருவதன்று. பல்லூழிகாலம் பயின்றரனையருச்சித்த பண்பினாலும், தெய்வமென்பதோர் சித்தமுண்டான செம்மையினாலும், வரற்பாலதாகும். இங்ஙனம் வந்த தெய்வக் கொள்கையிற் சிறந்த தெய்வக் கொள்கை சைவசமயக்கொள்கையெனல் வேதாகமங்களின் முடிபாகும்.

சைவத்தின் மேற்சம யம்வே றிலையதிற் சார்சிவமாம்
தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம் [பொருள்வாய்
மைவைத்த சீர்திருத் தேவார மும்திருவாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர்பொற் றாளெம் முயிர்த்துணையே

என்னும் பாடலும் இதனை வலியுறுத்தும்.

யாதொரு தெய்வங் கொண்டீரத்தெய்வ மாகியாங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர் மற்றத்தெய்வங்கள்

வேதனைப்படுமிறக்கும் பிறக்குமேல் வினையும்செய்யும்
ஆதலா லிவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே" என்பது

சிவஞானசித்தியார் செய்யுளாகும். ஆகவே பதிபசு பாசம் என்னும் முப்பொருள் உணர்த்தும் திப்பியநூல்கள் தமிழ்மொழியில் சைவசித்தாந்த சாத்திரமெனப்படும் பதினான்கு நூல்களேயாம்.

அவை,

உந்திக் களிறு உயர்போதஞ் சித்தியார்
பிந்திரு பாவுண்மைப் பிரகாசம்—வந்தவருட்
கோவைக் கொடிகவி நெஞ்சு விடுதூது
உண்மைநெறி சங்கற்ப முற்று

என்பதாம்.

புறச்சந்தான குரவர்களாலும், உய்யவந்த தேவநாயனாராலும், பிறராலும் இவைகள் ஆக்கப்பட்டனவாம். வைதிக சைவசித்தாந்த நூல்களாகுமிவை, இருவினையொப்பு மலபரிபாகசத்திநிபாதத் துத்தமர்க்கட்கே, இந்நூல்களாவன. சரியையாதி நாற்பாதங்களி னடக்கு முறையும், அவற்றினியலும், ஆசாரியர்பால் நன்கு கற்றுணர்ந்து தெளிந்து தவமார்க்க சன்மார்க்க நெறியினிற்றல் வேண்டுமென்பதும் தெரிக்கும். இதுதான் அச்சாத்திரத்தின் உட்கிடையாகும்.

1 ஓதுசம யங்கள்பொரு ளுணரு நூல்கள்
ஒன்றோடொன் றெவ்வாம லுளபலவு மிவற்றுள்
யாதுசம யம்பொருணூல் யாதிங் சென்னி
லிதுவாகு மதுவல்ல தெனும்பிணக்க தின்றி
நீதியினு லிவையெல்லா மோரிடத்தே காண
நின்றதியா தொருசமய மதுசமயம் பொருணூல்
ஆதலினு லிவையெல்லா மருமறையா கமத்தே
யடங்கியிடு மவையிரண்டு மரனடிக்கீ ழடங்கும்

2 சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்திச்
சென்ன மொன்றி லேசீவன் முத்தராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞானவாரி
மடுத்தானந்தம் பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பதமலர்க்கீழ் வைப்ப னென்று
மொழிந்திடவு முலகரெல்லா மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவ ரிது வென்னப் பிராந்தி

என்னும் பாடல்களில் சித்தாந்தத் தெளிவு இதுவெனல் நன்கு விளக்கப்பட்டுள்ளதைக் காண்க. இவ்வாறெல்லாம் சைவ சித்தாந்தம் வேதாகம வழியாகவே வளர்ந்து வந்துள்ளன. சைவசித்தாந்தத்தின் மெய்ம்மையினை யுடையதே தமிழிற் திருமுறைகளாம். அவற்றினைச் செய்தருளிய பெருமக்களும் இருபான் எழுவராவர். பன்னிருதிருமுறைகளும், சிவஞான போதப்பன்னிரண்டு சூத்திரங்களும் நன்கு சூக்குமமாகக் கூறுகின்றனவெனல் ஒருசம்பிரதாயம். இவற்றின் வழியில் வந்த காழியம் பதியில் வாழ்ந்த வள்ளல் பெருமகனும் ஒருவர் ஞானசாரத்தினை நவின்றனிஞர் என்பது அறியக் கிடக்கின்றது இது இங்குள்ள ஏட்டுச் சுவடியிற் கண்டதாகும்.

ஞானசாரமானது ஞானசாரியர் பக்குவமுற்ற மாணவரை முன்னிலையாக்கியுரைப்பதாகக் கடவுள்வாழ்த்து முதலாக நூற்றுப்பதினெட்டு விருத்தப்பாக்களை யுடையதாகும். சென்ற நூற்றாண்டினில் வாழ்ந்த பெரும்புலவர்களிலொரு சாரார் ஞானநூல்களினின்றுந் திரட்டி வேதாந்தக் கட்டளையும், சித்தாந்தக் கட்டளையும் உரை நடையில் யாத்துள்ளனர். அவைகளும் பலவொற்றுமையும் சில வேற்றுமையும் உடையன.

78-ம் பாடலில் ஏட்டின் சிதைவில் முனைமுரிவால் இருசீர்கள் விடப்பட்டுள்ளன. சிற்சில விடங்களில் நல்ல பாடங்காணப் பெருமையினுல் பொருளறிந்து கோடற்

கேற்ற வாய்ப்புமில்லை. பற்பல விடங்களில் சம்பிரதாய மொழிகள் பல்கிக் கிடக்கின்றன. இந்நூலை யமைதியாக வாராய்ந்து பொருளறிந்து கோடல்வேண்டும்

ஞானசாரமென நூற்பெயர் கூறுமிடத்து நன்கு விளக்கிப் போந்துள்ளார். வேதாந்த சைவமெய்ப் பொருட் பயனும் மூவர் சொற்றமிழ் வாய்மைச் சுருக்கமதாய், திரு வாசகத்தின் உண்மைக்குரிய காரணத்தால் இந்த நூற்கு ஞானசாரம் எனப்பெயர் போந்ததை விளக்கியுள்ளார். அப் பாடல் வருமாறு

" மிக்கவேதாந்த சைவ மெய்ப்பொருட் பயனும் மூவர்
தொக்க செந்தமிழ்சேர் வாய்மைச் சுருக்கமாய் வாதவூரர்
உக்குநின் றேதுமுண்மைக் குரியதாலிந்த நூற்குத்
தக்கபே ருரைக்கில் ஞானசாரமாம் பேரதாமே "

என்பதாம்.

உவமைகளும், உருவகங்களும் நன்குநயம்பெற வுரைக் கப்பட்டுள்ளன.

74-ம் பாடல்

" அவனியை யாளு மன்னன் அடல்மத மலையமர்ந்து
பவனிவந் துலவும் போதிற் பரிகரங் கூடச் செல்லும்
உவமையிற் பிராண னிற்கக் கரணங்க ளொடுங்க வொண்ணு
இவைதனக் குயிர்வேந் தல்ல விவையுயிர்க் கடிமை யன்றே.

என்னும் பாடற்பொருளை யோர்ந்துணரல் வேண்டும்.

எல்லாம்வல்ல பரமன் மானைக்காட்டி மானைப்பற்றுவது போல அருட்டிருமேனி தாங்கிக் குருவாகியெழுந்தருளி பக்கு வமுற்ற ஆன்மாக்கட்கு ஊனக்கண் காண வந்து தீக்கைகள் புரிந்து வீட்டினையடைந்துய்யச் செய்குவன், என்பதனை

ஆசாரியர் மாணாக்கர்க்குணர்த்துநிலையறிவுறுத்துஞ் செய்யுளை நோக்குதல் வேண்டும்

அச்செய்யுட்களாவன :—

"இவ்வகை மலத்தைப் நீக்கி யிறைவனே துக்கி யாகி
யவ்வகை யுயிர்க்கு மூல வறிவதாய் நின்று வந்த
மெய்வகை தன்மை நிற்க மேனிதான் உடையார் போலக்
கைவரக் கிடைத்திட் டுனக் கட்புல னுவ னன்றே"

ஆன்மாவினை யநாதியே பற்றிநின்ற பந்தபாசங்களை நீக்கி யருளுமுறைமையிது வெனச்சுட்டி நிற்பது. பின் வரும் பாடல்.

இருவினை யொப்பிற் சத்தி நிபாதக்கண் ணீசன் ஞானக்
குருவுரு வாகி வந்து கூறருங் கருணை கூர்ந்து
அருள்விழிச் சாம்ப வத்தால் அறிவினுக்க நாதியான
திரிமல மொழிக்கு ஞான தீக்கைமேற் செப்பலுற்றும்

என்பதாம்.

இங்ஙனமாகக் கணபதி வணக்க முதலாக "முடிவறு முடிவில் வைத்த முன்னவன் பாதம் போற்றி" என்னும் பாடல் இறுதியாக நூற்றுப் பதினெட்டுப் பாடல்களை யுடைத்தாகும் ஞானசாரம் என்னும் இந்நூல்.

இந்நூலின் இறுதிக்கண் வள்ளல் திருவடி வாழ்க என ஏட்டிற் காணக்கிடக்கின்றது இப்பெரு நூலினுக்குத் தக்க மேற்கோள்களுடன் ஒரு பேருரை இயற்றல் வேண்டுமெனல் எனது அவா. ஒரு கால வெல்லைக்குள் அச்சிடல் வேண்டுமெனும் ஆணை யுண்மைமையின் விரைந்து அச்சிடலாயிற்று சாத்திர நுட்பம் வல்ல பேரறிஞர்கள் இவ்வலுவலை மேற்கொண்டு செய்யின் மிகவும் நல்ல விளக்கமுறும். இப்பெற்றி யுற்ற நூல்கள் அச்சிட்டுலகிற் குபகாரமாம்படிச் செய்து

வரும் யூனியன் கவர்ன்மெண்டாருக்குத் தமிழுலகம் என்றும் நன்றிபாராட்டுங் கடப்பாட்டினை யுடைத்தாம்.

பொதுவாகக் காழியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப் பெருமானையே அருட்குரவனுகக் கொண்டு வாழ்ந்து வந்த வள்ளல் பெருமக்கள் தெள்ளத்தெளிந்த சாத்திரங்கள் பல செய்துள்ளனர். இன்னும் பல நூல்கள் ஏட்டின்கண் உள்ளன. அவற்றினைப்போதிய காலங்கொடுத்து அச்சிடல் வேண்டும் என அரசியலார் ஆணைதருவார்களாக. இத்தலைமுறையிலேயே இச்சரசுவதிமால் நூல் நிலையத்தில் உள்ள சீரிய ஏட்டுச்சுவடிகளைத் துருவி யச்சிடின் தமிழுலகுக்குப் பேருபகாரம் ஆம் என்பது ஒருதலை. இந்நூலைச் சாத்திரங்கள் நன்காய்ந்தவர்கள் நன்குநோக்குவார்களாக. விரைவில் அச்சிடல் வேண்டுமென ஆணையுண்மையால் பல வழுக்கள் அறியாமலே நிகழ்ந்திருத்தலும் கூடும். அவற்றினை யொருவி யமையுமாறு வேண்டுகின்றேன்.

### திருநாவுக்கரசர்

" சுழித்துணையாம் பிறவிவழித் துக்க நீக்குஞ்
சுருள்சடையெம் பெருமானே தூய தெண்ணீர்
இழிப்பரிய பசுபாசப் பிறப்பை நீக்கும்
என்றுணையே யென்னுடைய பெம்மான் றம்மான்
பழிப்பரிய திருமாலும் அயனுங் காணப்
பரிதியே சுருதிமுடிக் கணியாய் வாய்த்த
வழித்துணையாம் மழபாடி வயிரத் தூணே !
யென்றென்றே நானரற்றி நைகின்றேனே "

இங்ஙனம்,

பண்டித வித்துவான்,

**இராம. கோவிந்தசாமி பிள்ளை,**

தமிழ் நூலாராய்ச்சியாளர்.

தஞ்சாவூர்,
26—12—62

உ

திருச்சிற்றம்பலம்

# ஞானசாரம்.

(மூலமும் உரையும்)

---

### கணபதி வணக்கம்

(1) ஒருமைவெண் கோட்டுக் கன்றை
யோரிரு கன்னக் குன்றைச்
சொரியுமும் மதத்து நால்வாய்
ஐங்கரத் தும்பி தன்னை
யருவிகண் ணாறு மேழை
யன்பருக் கன்றி யெட்டாத்
திருவடி தவஞ்சே ரின்பத்
தெய்துவான் சிந்தை செய்வாம்.

(இ-ள்) ஒரு, வெண்மை நிறம் பொருந்திய தந்தத்தை யுடையவனை, ஒப்பற்ற இரண்டு காதுகளையுடைய மலையை, விடாது பொழிகின்ற மூன்று மதங்களையும், தொங்குகின்ற வாயையும் ஐந்து கைகளையும் உடைய யானையாகிய விநாயகக் கடவுளை, கண்களினின்றும் அருவிபோல் நீர்சொரியும் ஏழையாகிய அன்பருக்கல்லாமல் எட்ட முடியாத திருவடிப் பேறுறுந்தவமாகிய தொண்டினால் பெறும் பேரின்ப முத்தியினை யடையும்படிச் சிந்தையில் வைத்துத்தியானித்து வழிபாடு புரிவோம். இப் பாடல் எண்ணலங்காரமாம். ஒன்று, இரண்டு, மூன்று முதல் பத்து வரையில் குறிக்கப் பெற்றுள்ளது காண்க. யானைமுகக் கடவுள் பிரணவமாகிய ஓங்காரத் தொருவன் என்பது குறிக்கப் பெறுகின்றது. திருவடிதவம்—தொண்டு, (ஒன்பது) கன்னம்—கர்னம் (காது).

## நடராசப்பெருமான்

(2) அஞ்செழுத் துண்மை யான
அம்பலந் தன்னின் மூலத்
துஞ்சிருள் கிழிய நின்று
தோங்தோமென் றம்மை காணக்
குஞ்சித நடனஞ் செய்யுங்
குருமலர்ப் பதமுட் கொண்டு
வஞ்சக மலங்க ணீங்க
வழுத்திமுன் வணங்க லுற்றும்

(இ-ள்) பஞ்சாக்கர வடிவமான பொன் சபையின்கண், மூலமலமாகிய ஆணவ மல இருள்ஓட்டெடுப்ப, நிலைபெறத் தோம்தோம் தொங்தோம் என்று கருணை வடிவாகிய சிவகாம சுந்தரியம்மையார் கண்டு களிப்ப, குஞ்சித நடனமாகிய ஆனந்தக் கூத்தாடும் அழகிய செவந்த தாமரை மலர் போலும் திருவடிகளை மனதிற்கொண்டு, வஞ்சகமாகிய அழுக்குகள் ஒழியும்படி வாழ்த்துதலைச் செய்து காயத்தினல் வணங்குதலைப் புரிவோம் என்றபடி. சிவதாண்டவ வகை (108) நூற்றெட்டாம். குஞ்சிதபாதம் — தூக்கி வளைந்த திருவடி. உட்கொண்டு வழுத்தி வணங்குவது—முக்கரணங்களாலும் வழிபடுதலைக் குறிக்கும். மளம் வாக்குக் காயமென்பன முக்கரணங்களாம்.

## சிவகாமசுந்தரியம்மை

(3) ஆடகப் பொதுவி னின்றே
யரும்பொருள் நடிக்கு மின்ப
நாடகச் சான்ற தாய
ஞானநா யகிதன் செம்சொற்
சூடகக் கரமும் அன்புந்
தொலைவிலா நகையுஞ் செய்ய
பாடகப் பதமும் போற்றிப்
பவத்துய ரகற்ற லுற்றும்.

(இ-ள்) ஆடகமாகிய பொற்சபையில் நின்று அரிய மெய்ப்பொருளாகிய சிவபெருமான் ஆடுகின்ற பேரின்பக்கூத் தினுக்குச்சாட்சியாகிய ஞானம்பிகை (சிவகாமசுந்தரி) யினுடைய செவந்தபொன்வளையலணிந்த கைகளையும் உயிர்களிடத்து வைத்துள்ள தயையையும், அழிவற்ற புன்சிரிப்பையும் செவந்த சிலம்பணிந்த சேவடிகளையும் போற்றுதல் புரிந்து பிறவிப் பெரும்பிணியாகிய துன்பத்தைப் போக்கலை அடைந்தோம்.

## நால்வர் துதி

(4) அந்தமில் சிவனைக் காட்டி
யழுமிறை சரணம் போற்றி
வெந்தநீற் றறையை வென்ற
வித்தகன் பதங்கள் போற்றி
யெந்தையை யிருகாற் றூது
போக்கினன் இருதாள் போற்றி
யுந்திடும் விழிநீர் வாத
வூரன்ற் பாதம் போற்றி.

(இ-ள்) அந்தமில்லாத சிவபெருமானைத் தோடுடைய சிவன் எனச் சுட்டிக்காட்டி அம்மையப்பாவென அழுகின்ற திருஞானசம்பந்தப் பெருமான் திருவடி போற்றி, வெந்த சுண்ணும்பு அறையினை மாசில் வீணையும் மாலை மதியமும் எனத்தோத்தரித்துக் குளிர்வித்து வெற்றியுற்ற வித்தகனுகிய திருநாவுக்கரசரின் சேவடிகள் போற்றி, எமது பரமகருணுநிதியாகிய தியாகராசப்பெருமானைப் பரவை நாச்சியாரிடத்து ஊடல்தீர இரவினில் இருமுறை தூது செல்லும்படிச் செய்தவராகிய திருநாவலூரர்தம் இருதிருவடிகட்கும் வணக்கம் உரித்தாகுக. சொரியும் கண்ணீரையுடைய (அழுதடி யடைந்த) திருவாதவூராளியாகிய மாணிக்கவாசகப் பெருமான் மலரடிகட்கு வணக்க முரித்தாகுக என்பதாம்.

## நாயன்மார் துதி

(5) சீரருள் பெருகு முண்மைத்
திருத்தொண்டத் தொகையி னுள்ளோர்
ஆரருட் பாதம் போற்றி
யவர் திருத் தொண்டு தன்னைப்
பேரரு ளதனுற் றந்தோன்
பிணைமலர்ப் பாதம் போற்றி
சோர்வறச் சிவன்பா லன்பாந்
தொண்டர்தம் பதங்கள் போற்றி.

(இ-ள்) சிறந்த கருணைப் பெருக்கமுடைய மெய்மைத் திருத்தொண்டத்தொகையின் உள்ளவராகிய குருலிங்க சங்கபத்தி செய்த நாயன்மார்களுடைய நிறைந்த அருட்டிருவடிகட்கு வணக்கம். அந்நாயன்மார்களுடைய திருத்தொண்டின் சிறப்பினைமிக்க கருணையினுற்றந்தவனுகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய இருதிருவடிகட்கும் வணக்கம். தளர்வின்றிச் சிவபெருமான் திருவடிக்கே பதித்த அன்பு கொண்ட அடியவர் தம் திருவடிகள் போற்றி.

## நூற்பெயர்

(6) மிக்கவே தாந்த சைவ
மெய்ப்பொருட் பயனுய் மூவர்
தொக்கசெந் தமிழ்சேர் வாய்மை
சுருக்கமாய் வாத வூரர்
உக்குநின் றேது முண்மைக்
குரியதா லிந்த நூற்குத்
தக்கபே ருரைக்கில் ஞான
சாரமாம் பேர தாமே.

(இ-ள்) மேம்பட்ட வேதாந்தமே தெளிந்த சைவ விழுப்பொருட் பயனுய் மூவரும் சிவனருட் பொலிவுகொண்ட ஒருசேர அருளிச் செய்த, செந்தமிழ்த் தேவாரத் திருமுறைகளி

ஆுள்ள உண்மைகளின் சுருக்கமாய், மாணிக்கவாசகர் அறிவாற் சிவனேயாகி அழுது நின்ருேதும் ஞானத்திற்குரிய காரணத்தினுல் இந்த நூலினுக்குத் தகுதியுடைய பேரொன்று பேசப் புகில் **ஞானசாரம்** என்று பெயருடையதாகும்.

## அவையடக்கம்

(7) தம்பர மற்று நிற்போர்
தம்மிழப் பதனில் வாய்க்குஞ்
செம்பொரு ளதனை நூலாற்
செய்யநான் றுணிந்த செய்தி
யும்பரின் மீதே சுட்டி
யுணர்வறு குதலைச் சொல்லால்
அம்புலி வேண்டி நின்றே
யழுமழத் தன்மை போலும்.

**(இ-ள்)** தம்முடைய வசமிழந்து நிற்குஞ் சிவஞானிகள் தம்மை யிழந்து சிவபரமாயவழித் தலைப்படுஞ் செம்பொருளாகிய பேரின்ப நிலையினை, பாசஞான, பசுஞானமன்றிப் பதிஞானத்தினுலறியப்படும் பொருளே செம்பொருளாம். உணர்ந்தார்க்கும் உணர்வரிய பொருள் (உலகெலாமுணர்ந்தோதற்கரிய பொருள்) நூலினுல் (செப்ப) செய்ய நான் உறுதிகொண்ட செய்கை எங்ஙனமெனில், விண்ணிடத்தே சுட்டிக் காட்டி அறிவற்ற மழலை மொழிகளால் சந்திரனை விரும்பி நின்று அழுகின்ற இளமைத் தன்மையினை யொக்கும் என்பதாம். பேதமைத் தன்மைத்தாம் என்பதனுல் அவையினை யடக்குமதாயிற்ரும்.

## நூல்

(8) பொய்வகைச் சாரு வாகன்
புகழ்ச்சிவாத் துவிதி யீருய்
உய்பொரு ளிதுவென் றெண்ணி
யின்றள வுணர வொண்ணு

மெய்தரு பொருளா யின்ப
வீட்டில்வே தாந்த மாகுஞ்
சைவவத் துவிதந் தன்னைத்
தமிழினாற் சாற்ற லுற்றும்.

(இ-ள்) பொய்வகையான சாருவாகமதம் உலோகாயதமதம் முதல் சிவாத்துவிதி இறுதியாக உள்ளவை. உய்யும் பொருள் இது என்று ஆய்ந்து இன்றளவும் அறிந்தறிய முடியாத உண்மைதரும் பொருளாய்ப் பேரின்ப முத்தியில் வேதாந்தமே தெளிந்த சைவவிழுப்பொருளாய் விளங்குஞ் சைவ அத்துவிதந்தன்னை வேதஆகமங்கள் துணிந்தபொருளைத் தமிழ்மொழியாற் சாற்றத்தொடங்கினேம். (என்றவாறு) சமயபேதங்கள் அகம், புறம், அகப்புறம் புறப்புறச் சமயமென நான்காய் ஒவ்வொன்றும் அவ்வாறு உட்பிரிவுகளையுடையது.

சாருவாகமாவது:— இம்மதத்தாபகனாகிய சார்வாகன் அவந்திதேசத்தில், சங்கோத்தரா சேத்திரத்தில் உதிட்டிர சகம் (661)ல் பிறந்து இதே சகம் 727ல் இறந்தான். இப் பெயர்கொண்ட அரக்கன் ஒருவன் மதவிடயமாய்த் தருமராசனுடன் பேசிவதைக்கப்பட்டான் என்று பாரதம் சாந்தி பருவத்திற் கூறப்பட்டிருக்கின்றது. மதசித்தாந்தம், இது நாத்திகமதம் கடவுளுக்கு மோட்சாதிகாரமில்லை எனவும், உலகத்திலுள்ள வரையில் சுகமாய்ச் சீவிக்கவேண்டும் எனவும், மரணமே மோட்சம் எனவும் வேறு பிறப்பில்லை பரலோக சுகமில்லை எனவும், ஆகாயம் நீங்கலாகத் தத்துவம் நான்கு எனவும், இந்த நான்கு தத்துவச் சமுதாயமே தேகமெனவும், இவற்றாலாகிய இந்திரியச் சமுதாயமே ஆன்மா எனவும் இவ்விந்திரியநாசமே மரண மெனவும் கூறுவர் இம்மதத்தவருக்குப் பிருகற்பதி சூத்திரம் பிரமாணம். பிரமாணம் பிரத்தியக்கமே தவிர வேறு பிரமாணங் கிடையாதென்பர் இவர்கட்கு இம்மையில் அரிவையருடனும் மற்றைச்

சுகங்களுடனும் கூடியிருத்தலே சுகம், ஆனந்தாநுபவம் இல்லாத வியாதி முதலிய துன்பங்களே நரகம் எனவும் கூறுவர்.

(9) பரசிவன் பரையாற் பாய
குடிலையி னாதந் தோன்றி
விரவிய நாதந் தன்னில்
விந்துவாய் விந்து தன்னில்
மருவுசா தாக்கிய மாகி
மன்னுசா தாக்கி யத்தின்
உரவிடு மகேச மாய்ப்பின்
னுருத்திர மதனி லுண்டாம்.

(இ-ள்) பரமசிவன் பராசத்தியால் பரவிய குடிலையில் நாததத்துவம் தோன்றிக் கலந்த நாததத்துவத்தில் விந்துவாகி விந்து தத்துவத்தில் பொருந்திய சாதாக்கிய தத்துவமாகி, நிலைபெற்ற சாதாக்கிய தத்துவத்தில் நிலைபொருந்திய மகேசமாகிப் பின் உருத்திரம் அதனிற் றோன்றும் (எ - று)

(10) சொன்னமுன் விந்து தன்னிற்
சூக்குமா திகளோர் நான்கும்
வன்னமோ ரைம்பத் தொன்று
மந்திர மேழு கோடி
யுன்னிடு நூல்க டானும்
உற்பவித் தசுத்த மாயை
தன்னிலே யனந்தர் தம்பாற்
றுடிகலை நியதி சாதம்

(இ-ள்) கூறப்பட்ட விந்து தத்துவத்தில் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் எழுத்துக்கள் ஐம்பத்தொன்றும், சத்தகோடி மகா மந்திரங்களும் கருதப்படும் நூல்களும் தோன்றி அசுத்த மாயையினிடத்து அனந்தரிடத்தில் துடி, கலை, நியதி, சாதம் உண்டாம்.

(11) சாதமாங் கலையில் வித்தை
வித்தையி லராகஞ் சாரும்
ஓதிய கலையி லந்த
வுருத்திர ரருளி னாலே
தீதிலா மூல மான
பகுதிமுக் குணஞ்செ னித்தங்
காதிய வியத்தந் தன்னிற்
சித்தநற் புத்தி யாமே

**(இ-ள்)** சாதமாங் கலை யெனும் தத்துவத்தில் வித்தையும், வித்தையில் இராகமும் சாரும். ஓதிய கலை யெனுந் தத்துவத்தில் உருத்திரர் அருளினால் குற்றமில்லா மூலப்பிரகிருதி (மூலப் பகுதி) சாத்துவித, இராசத, தாமதமாகிய முக்குணங்கள் உதித்து ஆதியாகிய அவ்வியத்தந்தன்னில் சித்தமும் புத்தியும் உண்டாம்.

(12) எய்திய புத்தி யின்க
ணாங்கார மாங்கா ரந்தான்
றைசத மென்றுஞ் சாற்றும்
வைகரி யென்றும் பின்னர்ப்
பெய்தபூ தாதி யென்றும்
பேசுமாங் கார மூன்றிற்
றைசதந் தருமுன் சாத்து
விதமனஞ் சோத்தி ராதி,

**(இ-ள்)** எய்திய புத்தி தத்துவத்தில் ஆங்காரந் தோன்றும். அவ்வாங்காரமானது தைசதம், வைகரி, பூதாதி யென்றும் மூவகைப்படும். பேசப்பட்ட ஆங்கார மூன்றில் தைசத ஆங்காரத்தில், சாத்துவிதம், மனம், சோத்திராதி ஐந்தும் உண்டாம்.

(13) கூறும்வை கரியாங் காரத்
திராசத குணத்தைக் கொள்ளும்
மாறில்வாக் காதி யைந்தும்
வந்துபூ தாதி தன்னில்
ஈறில்தா மதகு ணத்தை
யெய்துசத் தாதி தோன்றித்
தேறுசத் தாதி யைந்திற்
செனித்தவை யினிச்சொல் கின்றோம்.

(இ-ள்) கூறப்பட்ட வைகரியாங்காரத்தில் இராசத குணத்தைக் கொள்ளுமாம். மாறுபாடில்லா வாக்காதி ஐந்தும் தோன்றி (தொழிற்பொறி), பூதாதி (மண் நீர், தீ, வளி, விண்)கள் உதித்து, அந்தமில்லாத தாமத குணத்தை யடைகின்ற சத்தாதிகள் உண்டாகி (சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்பன), தெளிந்துள்ள சத்தாதிகளாக சூக்கும பூதங்களில் உண்டாகியவற்றை இப்பொழுது சொல்கின்றோம். இவை தன் மாத்திரை. (நுண் பூதம்)

(14) மருவிய சத்தந் தன்னில்
வானமுன் வந்து வாயுப்
பரிசமீ தினிலுண் டாகிப்
பாவக முருவத் தாகி
யிரதமீ தினிலப் புண்டாய்
இருநிலங் கந்தத் தாகி
விரவிய தோற்றம் போல
வொடுக்கமும் விளம்ப லுற்றும்.

(இ-ள்) பொருந்திய சத்த தன் மாத்திரையில் ஆகாயந் தோன்றி வாயு பரிசமீதினில் உதித்து, உருவினில் தீத் தோன்றி, இரதத்தினில் அப்புண்டாகி, கந்தத்தில் இருநிலங்

தோன்றிக் கலந்த தோற்றம் போல, ஒடுங்கிப்போதலையும் சொல்லத் தொடங்குவாம். இவை, பருப்பூதம் (தூலபூதம்) எனப்படும்.

(15) மண்மணத் தொடுங்கு மப்பு
விரதத்தி லொடுங்குந் தேயு
வெண்ணுரு பத்தி லேயும்
வாயுவும் பரிசத் தெய்தும்
விண்ணொலி யதலின் மேவும்
மேவுசத் தாதி யைந்தும்
நண்ணுபூ தாதி யான
வாங்காரந் தன்னி னண்ணும்.

(இ-ள்) மண் மணத்திலும், அப்பு (நீர்) இரதத்திலும், தீ மதிக்கத்தக்க உருவத்திலும், வாயு பரிசத்திலும், விண் ஒலியிலும் ஒடுங்கப்பெறும், சத்த பரிச ரூப இரத கந்தங்களைந்தும் பூதாதியாகிய ஆங்காரத்தை யடையும் என்றபடி.

(16) உற்றரா சதகு ணத்தை
யுடையவாக் காதி யைந்தும்
மற்றவை கரியாங் காரந்
தன்னிலே மன்னு முன்னர்ச்
சொற்றசோத் திராதி யஞ்சத்
துவிதநற் குணத்தை முற்றப்
பற்றுதா மதமு முற்றை
சதத்தினிற் பதியு மன்றே.

(இ-ள்) பொருந்திய இராசத குணத்தையுடைய வாக்கு, பாதம் பாணி, பாயு, உபத்தம் ஆகிய கர்மேந்திரியமைந்தும் ஏனைய வைகரியாங்காரத்தினில் நிலைபெற்று ஒடுங்கும். முன்னர்ச் சொல்லப்பட்ட சோத்திரம் முதலிய வைந்தும் அத்துவிதமாகிய சத்துவ குணத்தை முற்றப்பற்றும். தாமதமும் முன்னர்க் கூறப்பட்ட தைசதத்தினிற் பதியும் (மறையும்) அன்றே—அசைநிலையாம்.

(17) மன்னுமாங் கார மூன்றின்
வகுப்பேவந் தொன்ருய்ப் புத்தி
தன்னிலே யொடுங்கு மந்தப்
புத்திசித் தத்திற் சாரும்
முன்னுமச் சித்த மைவி
யத்தத்தி லொடுங்கும் பின்னும்
பன்னுமவ் வியத்த மான
பகுதியின் ருெகுதி சொல்வாம்.

(இ-ள்) நிலைபெற்ற ஆங்காரமூன்றின் வகுப்புத்தானே வந்து ஏகமாகி புத்திதத்துவத்திலே யொடுங்கும். அந்தப் புத்தியானது சித்ததத்துவத்தின்கண் ஒடுங்கிடும், முற்பட்ட அச்சித்தமானது, அவ்வியத்த மெனப்படும் மூலப்பகுதியில் ஒடுங்கும், கலைஞர்களால் வியந்தோதப்பெற்ற மூலப்பகுதி யின் தொகுதியினைக் கூறுவாம்.

(18) பஞ்சவிஞ் சதிக ளாய
வியத்தமாம் பகுதி தானும்
விஞ்சிய ராகந் தானும்
வித்தையு மாக மூன்றும்
எஞ்சிடு (கலை)யி லெய்து
மிக்கலை நியதி காலஞ்
துஞ்சிடு மாயை தன்னிற்
சுத்தத்தி லொடுக்கஞ் சொல்வாம்.

(இ-ள்) பஞ்சவிஞ்சதிகளாகிய பகுதியும் இராகமும், வித்தையும் ஆகிய மூன்றும் எஞ்சியிராநின்ற கலையில் ஒடுங் கிடும். இக்கலையும், நியதியும், காலமும் மாயையில் ஒடுங் கிடும். சுத்தமென்பது சுத்தமாயையாம், பஞ்சவிம்சதி இரு பத்தைந்து. அவைநுண்பூதம் 5. பருப்பூதம் 5. தொழிற் பொறிகள் 5. அறிவுப்பொறி 5. அந்தக்கரணம் 4. மான் 1 ஆக இருபத்தைந்தும் மூலப்பிர கிருதியாம்.

(19) பொருவரு நூல்கள் போற்றும்
மனுவெழு கோடி மிக்க
வருணமோ ரைம்பத் தொன்று
நால்வகை வாக்கு முன்னர்ப்
பருணமித் தெழுந்த விந்துத்
தன்னிலே பதியும் வித்தை
தருமகே சத்தி லெய்தும்
மகேசமுஞ் சதாசி வத்தாம்.

(இ-ள்) உவமையில்லாத முதனூல்களாகிய வேத சிவா கமங்கள் துதிக்கும் சப்தகோடி மகாமந்திரங்கள், மேம்பட்ட ஐம்பத்தோர் அக்கரங்கள், நால்வகை வாக்குகளிடத்து (அவை—சூக்குமை, பைசந்தி வைகரி, வைந்தவம் என்பன) உருத்திரிந்துதோன்றி விந்துவனிடத்திலே பதியும் (தங்கும்) வித்தை, மகேசத்தில் ஒடுங்கும் மகேசமும் சதாசிவத்தில் அயிக்கியமாம்.

(20) ஆதியாஞ் சதாசி வந்தான்
விந்துவி லடங்கும் விந்து
நாதமீ தொடுங்கும் நாதங்
குடிலைதா னென்று நல்லோர்
ஓதுமா மாயை தன்பா
லொடுங்குமிவ் விரண்டு மீசன்
தீதறு கிரியா சத்தி
தன்னிலே சேரு மன்றே.

(இ-ள்) ஆதியாகிய சதாசிவமானது, விந்து தத்துவத்தி னிலடங்கிடும், விந்துவானது நாதத்தினிடம் பொருந்தியிடும், நாதங்குடிலையினிடத்து ஒடுங்கிடும், குடிலையானது சுத்த மாயையினில் ஒடுங்கும். நாதமும் குடிலையும் சர்வேசுவர னாகிய சிவபெருமானுடைய கிரியாசத்தியி லொடுங்கும். அன்றே அசைநிலைகள்.

(21) செப்பிய கிரிகை யிச்சை
ஞானமெய்ப் பரையிற் சேரும்
அப்பரை பரத்தொ டுங்கும்
ஆக்கமு மழிவு மில்லை
யிப்படி யொடுக்கந் தோற்ற
மிருந்தவா கண்டா யாகிற்
றப்பிலா விச்சா ஞானக்
கிரிகையின் றன்மை கேளாய்.

**(இ-ள்)** சொல்லப்பட்ட கிரியாசத்தியும், இச்சாசத்தியும், ஞானசத்தியும் ஆகிய மூவகைச் சத்திகளும் பரை (பராசத்தி)யிற் சேரும். அப்பரையானது பரம்பொருளாகிய பரசிவத்து ஒடுங்கும். ஈண்டுத் தோற்றக் கேடுகளின்று. இங்ஙனமாகத் தோற்றமும் ஒடுக்கமும் இருந்த தன்மையினை நன்கு ஆராய்ந்தாய் ஆனால், தவறு இல்லா. இச்சை ஞானக்கிரியைகளினுடைய இயல்பை (பண்பினை)க் கேட்பாயாக.

(22) சாற்றிய பரசி வன்றன்
பராசத்தி தன்னின் முன்னே
தோற்றிய விச்சா ஞானத்
தொழிலொரு மூன்று மான்மா
மாற்றரு மிச்சா ஞானக்
கிரிகையை யெழுப்பும் மன்னித்
தேற்றமி லிச்சா ஞானச்
செய்தியுன் செய்தி யாமே.

**(இ-ள்)** கூறப்பட்ட பரசிவன் றன்பராசத்தியின் சந்நிதியில் உண்டாக்கப்பட்ட இச்சையும், அறிவும், தொழிலும் ஆகிய மூன்றும் உயிர்களால் மாற்றமுடியாத இச்சாசத்தியையும், ஞானசத்தியையும், கிரியா சத்தியையும் எழுப்பிடும். நிலைத்துத் தெளிவில்லாத இச்சை ஞானத்தொழில்கள். மாணவக! இவை நினது தொழிலாம் (செயலாம்),

(23) சொல்லிய விச்சா ஞானக்
கிரிகையுன் சொரூப மாக்கி
எல்லையில் போக மாய
இந்திய விடயத் தீசன்
புல்லிய கறங்கு கொள்ளி
வட்டமே போன டிப்பித்
தொல்லையி லுனையு ணர்த்து
முறைமையை யுரைக்க லுற்றும்.

(இ-ள்) சொல்லப்பட்ட முச்சத்திகளும் உனது வடிவினைத் தோற்றுவித்து அளவற்ற போகமாகிய பொறிபுலன்களில் சிவபெருமான் பொருந்திய கொள்ளிவட்டமும் காற்றுடியும் போல நடிப்பித்து (கூத்தாட்டுவித்து) விரைவினில் உன்னை யுணர்த்துவிக்கின்ற கிரமத்தை (வரன்முறை) உரைக்கத் தொடங்குகின்றோம்.

(24) வானகம் வாயுத் தீநீர்
மண்ணெனும் பூத மைந்தின்
மேலிகழ் செவித்தோல் கண்ணு
நாசியின் விடய மாகத்
தாறுறு கின்ற சத்தப்
பரிசரூ பிரத கெந்தம்
ஊனமில் வாக்குப் பாதம்
பாணிபா யுருவு பத்தம்.

(இ-ள்) ஆகாயம், வாயு, தீ, நீர், மண் எனப்படும் பூதமைந்தினிடத்தும் நிகழ்கின்ற முறையே செவியும் தோலும் கண்ணும், நாவும், மூக்கும், ஆகிய பொறிகட்குப் புலப்படுகின்ற சத்தமும் பரிசமும், உருவமும், இரதமும், கந்தமும் குற்றமற்ற வாக்கும், பாதமும், பாணியும், பாயுவும், உபத்தமும்.

(25) மேல்சொலல் கெமன தான
விசர்க்கமா னந்த மானச்
சாலும்வாக் காதி தன்னைச்
சாருமை விடயம் பின்னர்
ஏலுமா னதமே புத்தி
யெண்ணுமாங் காரம் சித்தம்
நாலுமற் றிவைகள் போக்கிய
காண்டமாய் நண்ணு மன்றே

(இ-ள்) மேற்சொல்லப்பட்ட தொழிற்பொறியிடமாகச் சொல்லல், நடத்தல், கொடுத்தல், கழித்தல், ஆனந்தமாகிய கர்மேந்திரியங்களும், பொருந்திய மனமும் புத்தியும் ஆங்காரமும், சித்தமும் ஆகிய நான்கும் ஆகிய இருபத்து நான்கும் போக்கிய காண்டமாய்ப் பொருந்தும் (அடையும்)

(26) அனைத்தினும் பற்றி நிற்றல்
நிச்சயம் எழும்பல் ஐயம்
தனைச்செயு மனதி நாலுஞ்
சார்புல னைந்தும் பூதம்
எனச்சொல்வ தைஞ்சு ஞானேந்
திரியமைஞ் சஞ்சதென்பார்
வினைத்தவாக் காதி யாக
விளம்பிரு பத்து நாலும்

(இ-ள்) எல்லாவற்றிலும் பற்றி நிற்றலும், நிச்சயம் புரிதலும், எழும்பலும், சந்தேகந்தனைச்செயலும் ஆகிய மனம் புத்தி ஆங்காரம், சித்தமாகிய நான்கும், புலனைந்தும், பூதமைந்தும், ஞானேந்திரியம் ஐந்தும் வினைவயத்ததாகிய வாக்குமுதலாக விளம்பப்பட்ட இருபத்து நான்குமாம் இவை (ஆன்ம தத்துவங்களாம்.)

(27) இங்கிதற் கான்ம தத்துவ
மென்றும்பேர் இதற்கு மேலாம்
தங்கிய கால மோடு
நியதிசார் வித்தை பின்னர்ப்
பொங்கிய கலைய ராகம்
புருடனோ டுற்ற மாயை
யங்கவை யேழும் போகக்
காண்டமென் றறைவ ரன்றே.

(இ-ள்) இந்த இருபத்துநான்கு தத்துவங்களும் ஆன்ம தத்துவமென்று பெயராம். இவற்றிற்கு மேலாகித் தங்கிப் பொருந்திய காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன ஏழும் போககாண்டமென்று கூறுவர்.

(28) காலமு மூன்றாய் மூன்றுங்
கழிதரு காலம் பின்னர்
ஏலவே நிகழுங் காலம்
எதிர்வரு கால மென்பர்
சாலுநற் பலன்க ளெல்லை
சார்தொறும் புதுமை மூன்றிற்
சீலநிச் சயமே பண்ணும்
நியதியின் செய்திதானே.

(இ-ள்) காலம் மூன்றாய், அம்மூன்றும் இறப்பும், நிகழ்வும், எதிர்வும் எனப்படும். நிறையும் நற்பலன்களின் வரம்பு (முடிவு) புதுமை மூன்றின்கண்ணும் சீலத்தை நிச்சயம் பண்ணுதலே நியதி தத்துவத்தின் செயலாம். தானே அசை நிலைகள்.

(29) ஆணவஞ் சிறிதே நீக்கி
யருங்கலை கிரிகை யாக்கும்
பேணிய வித்தை ஞானம்
பெருக்கிடு மராக மிச்சை
நீணுதல் பண்ணும் பஞ்ச
விடயமா நிலைமை தோறும்
காணுதல் முந்தி நிற்றல்
கருதிடிற் புருட னுமே.

(இ-ள்) அரிய கலையாகிய தத்துவமானது ஆன்மாவைப் பற்றிய ஆணவமலத்தை ஏகதேசத்தில் நீக்கிகிரியாசத்தியைத் தோற்றுவிக்கும். பேணப்பட்ட வித்தையானது ஞானசத்தியை விளக்கும், அராக தத்துவமானது இச்சையெனுஞ் சத்தியை நீண்டிடச் செய்யும் புருடன் (மாயையினின்று தோன்றிய கலை, வித்தை, அராகம் என்பன, ஆன்மாவின் கிரியை ஞானம், இச்சை என்பனவற்றை விளக்கியபோது) காலம் நியதி களுட்படப் பஞ்ச கஞ்சுகமுடையதாய் அநித இச்சை முதலிய மூன்றையும் ஏகதேசத்தில் மருவி (கண்டு) போகத்தில் உன்முகமாய் நிற்றலைச்செய்வது. பஞ்சவிடயம்—நியதி காலம் இராகம், வித்தை, கலை என்பன. இதனைப்பஞ்சகஞ்சுகம் என்பது வழக்கு.

(30) மாயைதான் விடயந் தன்னில்
அறிவினை மயக்கி நிற்கும்
மேயவிவ் வசுத்தா சுத்த
வித்தியா தத்து வத்தோ(டு)
ஆயதத் துவமுப் பத்தொன்
றதற்குமே லவத்தை யீசன்
தூயசா தாக்கியம் விந்து
நாதநற் சுத்த மைந்தே.

(இ-ள்) மாயையானது விடயத்தினிடத்து, அறிவினை மயக்கி நிற்பதாம். பொருந்திய இம்மாயையானது, சுத்தமெனவும், அசுத்தமெனவும் இருவகைத்தாம். சுத்த மாயை உன்முகமாகவும், அசுத்தமாயை அதோமுகமாகவும் இருக்கும், அசுத்தமாயை வித்தியா தத்துவத்துடன் ஆகிய முப்பத்து ஒன்றுடன் கூடியிருப்பது. சுத்தமாயை:—தூய சாதாக்கியம், விந்து, நாதம், சத்திசிவம், சிவதத்துவம் சத்தி தத்துவம், சாதாக்கிய தத்துவம், விந்து, நாதம், இவ்வைந் தும் ஆம் (சிவதத்துவம், சத்திதத்துவம், சாதாக்கியம், ஈசுர தத்துவம், சுத்தவித்தியா தத்துவம் என்பனவும் ஆம்)

(31) ஞானநற் கிரிகை தன்னை
வகுத்ததில் ஞான மேறில்
ஊனமில் வித்தை யாகும்
ஒன்றிய ஞான மன்றி
மேனிகழ் கிரிகை யேறின்
மகேசமாம் விளம்பி ரண்டும்
தானவை யொத்தல் சாதாக்
கியமெனச் சாற்று நாலே.

(இ-ள்) ஞானசத்தி கிரியாசத்தியை வகுத்து, அதனிடத்து ஞானமானது ஊர்ந்திடில் குற்றமற்ற வித்தையாகும். பொருந்திய ஞானமல்லாமல் கிரியாசத்தி ஊர்ந்திடில் மகேசதத்துவமாம், சொல்லப்பட்ட ஞானமுங் கிரியையும் தம்மில் அவை சமமாக ஒத்தல் சாதாக்கியமாம் என நூல்கள் நுவன்றிடும் ஆம் என்க.

(வி-ரை) சிவதத்துவம் ஞானமாயும், சத்திதத்துவம் கிரியையாயும், இவை, தனித்தனி வியாபரிக்குங்கால் உள்ள நிலையாம். சாதாக்கிய தத்துவம் ஞானமும் கிரியையும் ஒத்ததாயும், ஏறிக்குறைந்தும் வியாபரிக்குங்கால் ஈசுவர தத்துவம் கிரியை ஏறி,ஞானம் குறைந்தும், சுத்தவித்தியா தத்துவம் ஞானம் ஏறிக் கிரியை குறைந்தும் நிற்கும். ஆகவே

சிவதத்துவம் ஐந்தும், வித்தியாதத்துவம் ஏழும், ஆன்மதத்துவம் இருபத்துநான்கும் ஆகச் சேர்ந்த முப்பத்தாறு தத்துவங்களும் பொதுவும், சிறப்பும், பொதுச்சிறப்பும் என மூவகைத்து.

(32) மெய்யருண் முகிழ்ப்பு விந்து
மேவிடுஞ் செலவு நாதம்
ஐவகை யாகு மிக்கோர்
அறிசிவ தத்து வங்கள்
மெய்வகை யிவைக ளைந்தும்
பிரேரகாண் டமதா மாக
உய்வகை முப்பத் தாறிங்
கென்பர்நூ லுணர்ந்து ளோரே.

(இ-ள்) அறிவின் மேம்பட்டோர் அறிந்த சிவதத்துவங்கள் ஐந்தாகும் (அவை மெய்யருள் முகிழ்ப்பு, விந்து மேவிடுஞ்செலவு, நாதமாம்) மெய்வகையாகிய இவைகள் ஐந்தும் பிரேரகாண்டமதாகும். இவைகளே மற்றவைகளைத் தொழிற்படுத்துகையினாலே பிரேரகாண்டமென்றது பிரேரித்தல் செலுத்துதல் ஆக உய்யும்விதம் முப்பத்தாறும் என்று நூலுணர்ந்த நுண்மதியினோர் நுவலுவர் என்றபடி.

(33) ஓதிடு முப்பத் தாறில்
ஓரைஞ்சு செலுத்த மற்றேழ்
போதநற் கிரிகை யிச்சை
புணர்த்திடப் போதன் றன்பால்
மோதிரு பத்து நாலு
முதலற வடிவ மாக்கல்
தீதற வுணர்த்துந் தன்மை
யவத்தைகள் செப்பக் கேணீ.

(இ-ள்) கூறப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களில் பிரேரகாண்டமதாகக் கூறப்பட்ட சிவதத்துவங்கள் ஐந்தும்

செலுத்த காலம் நியதி, கலை, வித்தை அராகம், புருடன் மாயையாகிய ஏழுவித்தியாதத்துவங்களும், ஞானம், கிரியை, இச்சையாகிய சத்திகளைப் புணர்த்திட (சேர்த்த இப்போது இத்தத்துவங்கட்கு போகச்சயித்திரு காண்டமெனப் பெயராம்) ஆன்மாவினிடத்தில் ஒன்றுபட்டிருக்கின்ற இருபத்து நான்கும் முதலற உருவுண்டாக்கல் (பரிணமித்தலாம்) ஏ மாணவக ! நீ குற்றமற அறிவுறுத்துந் தன்மையினையுடைய அவத்தைகளைக் கூறுகின்றேன் கேட்பாயாக. (எ-று)

(34) கீழிடு மவத்தை யென்றுங்
கிளர்நடு வவத்தை யென்றும்
வாழுமே லவத்தை யென்றும்
மாமறை புகலு மிங்குக்
கேழவி சேரி வற்றிற்
கீழவத் தையைக் கிளக்கில்
தாழ்வில்சாக் கிராதி யைந்தாச்
சாற்றுவ ரருளி னாலே.

(இ-ள்) பெருமை வாய்ந்த வேதங்கள் கீழாலவத்தை யென்றும் சிறந்தோதப்பட்ட நடுஅவத்தை யென்றும் மேலாலவத்தை யென்றும் மூவகைப்படும் என விளம்புமாம். இவ்விடத்து நிறம் அவியச் சேரப்பெறும் இவற்றில் கீழாமவத்தையைச் சொன்னால் தாழ்வற்ற சாக்கிராதி ஐந்தாக அருட்டன்மையால் அறைவர் நல்லோர், சாக்கிராதி ஐந்தாவன:– சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பனவாம்.

(35) சாக்கிர சுவப்னத் தோடு
தந்நிலைச் சுழுத்தி பின்னர்
போக்கிய துரிய மோகம்
பொருந்திடு மதீ மென்று

நோக்குவ ரவத்தை யைஞ்சாம்
ஈங்கிவை நவிலுங் காலை
நீக்கமி லருளி னின்று
கேட்டியே னிகழ்த்த லாமே.

(இ-ள்) சாக்கிரம் சுவப்பனத்துடன் தம் நிலையிலுள்ள சுழுத்தி, பின்னர்ச் செலுத்தப்பட்ட துரியம், மயக்கம் பொருந்திடும் துரியாதீதம், ஆக ஆராய்வர். அவத்தை ஐந்தென; இவற்றினைச் சொல்லுமிடத்து நீக்கமில்லாத் திருவருள் செயல்பட்டு நிலைத்துக் கேட்பாயேல் அவற்றினைக் கூறலாம்.

(36) முன்னுரை செய்த முப்பத்
தாறினில் மொழிந்த பூதத்
தன்னிலை யைஞ்சோ டாறு
கலாதிக ளைஞ்ச தாக
உன்னிய சுத்த மோவ
வுற்றிடும் வாயுப் பத்து
மன்னிய வசன மாகி
வந்தவை யைந்துங் கூடும்.

(இ-ள்) முதலாவதாக வுரைக்கப்பட்ட முப்பத்தாறு தத்துவங்களில், கூறப்பட்ட பூதத்தின் நிலை ஐந்துடன் ஆறு கலாதிகள், ஐந்தாகக் கருதப்பட்ட சுத்தந் தொலைய பொருந்தியிடும், பத்துவாயுக்களும் வசனமாகி வந்தவை ஐந்தும் கூடும். இவைகள், அவத்தைகட்குரிய கருவிகளாகக் கொள்ளப்படும்.

(37) இவ்வகை சோடசங்கள்
ஏகிடப் பதினைஞ் சாகி
மெய்வகை கருவி வந்து
மேவலான் முப்பத் தைஞ்சாம்

அவ்வகை யோடு நெற்றி
யதன்மருங் கணைந்து நிற்றல்
செய்வதே சாக்கிரத்தின்
செய்தியென் றுரைப்பர் சேர்ந்தோர்.

(இ-ள்) இவ்வகைப்பதினாறும் பதினைந்து ஆகி (முப்பத் தொன்றுடன் அந்தக்கரணம் 4 நான்குடன் கூட முப்பத்தைந்தாம். இம்முப்பத்தைந்தோடு புருவமத்தியில் அணைந்து நிற்றலைப் பொருந்துவதே சாக்கிரத்தின் செய்தியாகுமெனத் தெளிவுற்ற பெரியோர் செப்புவர். பதினைஞ்சு; ஞானேந்திரியம் 5 கர்மேந்திரியம் 5 தன்மாத்திரை 5 ஆகப்பதினைந்து. பதினாறு (சோடசம்)புருடன் 1 வசனாதி 5 வாயு 10 ஆக 16 அந்தக்கரணம் நான்கு ஆக 35.

(38) சொற்றரு முப்பத் தஞ்சோ
டாணவந் துவன்றி மூட
நிற்றல்சாக் கிரம தாகும்
நீடுசோத் திராதி பின்னர்
உற்றவாக் காதி பத்தும்
ஒண்ணுத லிற்கக் கண்டப்
பற்றினி லிருபத் தைந்தும்
படர்வன சுவப்ன மாகும்,

(இ-ள்) சொல்லுவதற்கரிய முப்பத்தைந்துடன் ஆணவமல நெருங்கி மறைய நிற்றல் சாக்கிராவத்தையாம் ஞானேந்திரியமைந்தும் கர்மேந்திரியம் ஐந்துமாகப் பத்தும் புருவமத்தியில் நிற்க எஞ்சிய இருபத்தைந்து கருவிகளுடன் கூடி கண்டத்தானத்தினைப்பற்றிச் செல்வன சுவப்பன அவத்தையாம்.

(39) கண்டமார் இருபத் தைஞ்சிற்
கருவிகண் மூன் று நீங்க
முண்டக விதயஞ் சேர்தல்
சுழுத்தியா மொழிந்த மூன்றில்
எண்டரு மிரண்டா நாபி
யெய்திடல் துரிய மூலக்
குண்டலி யதனி லொன்ருய்க்
கூறிடு மறைகடாமே(ம)

(இ-ள்) இது சுழுத்தியவத்தையினைச் சொல்லுகின்றது. கண்டத்திளிடத்தே பொருந்தியுள்ள இருபத்தைந்து கருவிகளில் இருபத்திரண்டு நிற்க சித்தம், பிராணன் புருடன் என்னும் மூன்றுகருவிகளுடன் கூடி தாமரையாகிய இதயத்திற் சேர்தலேயாம் ஒழிந்த மூன்றில் சித்த மாத்திரம் இதயத்தில் நிற்க பிராணன் புருடன் என்னும் இரண்டுகருவிகளுடன் கூடி ஆன்மா நாபித்தானத்தையடைதல் துரியாவத்தையாம். மூலக்குண்டலியில் மூலாதாரத்தில் புருடனுடம்பாக ஆன்மா ஒன்ருய் அடங்கியிருப்பது துரியாதீதவவத்தையென மறை அறையாநிற்கும்.

(40) ஆகக்கீ ழவத்தை மீது
சாக்கிரத் தவத்தை யைஞ்சா
போகத்தை யுரைக்குங் காலை
யதீதமே முதலாய்க் கொண்டு
தேகத்தி னுதற்க ணைந்தின்
செய்திக டோறுங் கண்டாற்
போகத்தி னிடைய வத்தை
போயருட் போத னுய்நீ.

(இ-ள்) ஆகக்கீழவத்தை மேல்சாக்கிரத்தவத்தை, ஐந்தாக நுகர்விக்க(போகத்தை)அதீதமே முதலாகக்கொண்டு உடம்பின் நெற்றிமத்தி முதலிய ஐந்திடத்துச் செய்திகள்

தோறும் ஆய்ந்தால் யோகத்தின்கண் நடுவவத்தையிற் சென்று கருணைபொருந்திய ஞானியை ஆய்வாய் நீ என்பதாம்.

(41) நாட்டுமே லவத்தை கூறி
னடுகீழ வத்தை நாடக்
காட்டிய சுத்த மாயைக்
கண்ணினி லைந்து நான்கு
கூட்டுமூன் றிரண்டொன் றாகக்
கூறுமஞ் சவத்தை தன்னை
விட்டுமே லவத்தை யென்று
வேதநூல் விளம்பு மன்றே.

(இ-ள்) நிலைபெற்ற மேலவத்தையைக் கூறின் மத்தியாவத்தை கீழாலவத்தையை ஆராய காட்டப்பட்ட சுத்தமாயை சாக்கிரத்தில் ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று. ஆகக் கூறும் அஞ்சு அவத்தை தன்னை மேலாலவத்தை (நின்மலாவத்தை) யென்று வேதங்கள் விளம்புமாம்.

(நின்மல) மேலாலவத்தையில் சாக்கிரமாவது: சிவதத்துவம் ஐந்தில் சுத்தவத்தை நீங்காமல் நீங்கின நிலையாம். சுவப்பனமாவது:—சுத்தவித்தையும் ஈச்சுரமும் நீங்காமல் நீங்கின அவதாரமாம். சுழுத்தி:— சுத்தவித்தை ஈச்சுரம், சாதாக்கியமெனு மூன்றும் நீங்காமல் நீங்கின அவதாரமாம். துரியம்:—சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தியெனும் நான்கும் நீங்காமல் நீங்கின நிலையாம். துரியாதீதமாவது:—சுத்த தத்துவங்களைந்தும் நீங்காமல் நீங்கின அவதாரமாம். தலைதடுமாற்றமாக வெண்ணிக்கையில் முறையாகக் கொண்டதறிக என்பதாம்.

(42) இங்கிவை பதினஞ் சாகும்
இதற்குமே லுணர்த்துந் தன்மைப்
பங்கினை யுரைக்கி லோரோர்
விடயமாம் பகுதி தோறும்

எங்குமாஞ் சுத்த மைந்தும்
அநாதியுங் கலாதி யேழுந்
தங்குமைம் பொறியைம் பூதம்
தன்னிலொன் றென்று சாரும்.

(இ-ள்) இங்கு, இவை (அவத்தைகள்) பதினைந்து ஆகும். இதற்குமேல் மூன்றவத்தைகளுள. அவை காரணம் சகலம் சுத்தமென்பன. காரணம் பற்றி மூன்றும் ஆகப்பதினெட்டவத்தைகளாகும். இதற்குமேல் அறிவிக்கப்படும் தன்மைப்பகுதியினைக் கூறினால் ஒவ்வொரு விடயம் பற்றி ஒவ்வொரு பிரிவுதோறும் சர்வவியாபகமாகிய சிவதத்துவமாகிய தத்துவம்ஐந்தும், அநாதியாகியசிவமும், கலையாதியேழுதத்துவங்களும், பொருந்தப்பெறும் ஐம்பொறி ஐம்பூதங்களில் ஒன்றில் ஒன்றுசாரும். இதன் விரிவை, சித்தாந்த சாத்திரங்களிற் காண்க.

(43) ஈங்கிவை பதினெட் டோடு
மெண்ணுமைங் கலையி னின்ற
பாங்குரைக் கருமந் தன்னை
யைம்பொறிப் பகுதி யாலுற்
றோங்கிய நிவிர்த்தி யாதி
யுற்றிடும் போதந் தன்னை
யாங்கதி னின்று நின்றே
யருந்துவ துணர்த்துந் தன்மை.

(இ-ள்) மேற்பாவில் உணர்த்துந் தன்மை யென்றதனை யிப்பாடலறிவுறுக்கின்றது. பஞ்சகலைகளினின்ற தன்மையைச் சாற்றப்பெறும் கர்மத்தினைப் பொருந்தியிடும் ஞானத்தை யவ்விடமிருந்தே நின்று புசிப்பது அறிவுறும் இயல்பாம் என்பதாம்.

(44) ஓதிய வுணர்த்துந் தன்மை
யவத்தைக ளெதற்கென் றுன்னிற்
போதமில் மாயைச் செய்தி
புகன்றவா ணவத்தின் செய்தி
யேதுகா ரணமா மென்னி
னிவ்வயி னுபகா ரந்தான்
றீதுறு கன்மத் தாலே
செறிந்தமை யறிந்து கொண்ணீ.

(இ-ள்) ஓதியவற்றினை யுணர்த்துத்தன்மை, அவத்தைகள், எதற்கு என்று கருதிடின் ஞானமில்லாத மாயையின் செய்கை, கூறப்பட்ட ஆணவத்தின் செய்கை, ஏது காரணமாம் என்று வினவில், இவ்விடத்தில் உபகாரத்தன்மைதானாகும். இவைகளெல்லாம் தீமைபயக்கும் (பிறப்பு இறப்புக்களுக்கு ஏதுவாயது) வினைகளால் வந்துற்றமையினை நீ யறிந்து கொள்வாயாக. (எ. று)

(45) கேதமி லுணர்த்துந் தன்மை
தனக்குமேற் கேவ லத்தை
யோதிடி னுன்ற னுண்மை
யொன்றுமற் றிரண்டு மற்றுப்
பேதமில் வடிவு மற்றுப்
பிறங்கிய கருவி யற்றுத்
தீதறு மனக்கண் மானச்
சித்துட னசித்து மற்று.

(இ-ள்) குற்றமில்லாதபடி, அறிவுறுத்தவல்லதன்மை, தனக்கு மேலாக கேவலாவத்தையினை நன்கு உரைத்தால் மாணவக! உன்றுடைய உண்மை நிலையானது எங்ஙனமெனில்! கூறுதும். அஃதாவது, ஒன்று ஒழிந்து, இரண்டு நீங்கி, வேற்றுமையில்லாத உருவத் தன்மையும் அற்று, இவைகட்கு விளக்கமாக நின்ற கருவிகள் (உபகரணங்கள்)

தொலைந்து, தீமையானது படிந்த மனத்தின்கண் (இடத்து) பெருமை வாய்ந்த அறிவுத் தன்மையும் அறியாத்தன்மையும் ஆயவை, ஒழியப் பெற்று.

(46) துன்பமோ டின்ப மற்றுத்
தொல்லிருட் கிடையு மற்று
முன்பொடு பின்பு மற்று
முழுதுமா ணவமே யாகி
யன்புசெய் கலாதி யற்றங்
கறிகுறி யற்று சற்றுந்
தன்குண மற்று நிற்றல்
கேவலத் தன்மை தானே.

(இ-ள்) ஆன்மாவும் உடலும் ஒன்றாகவுள்ள நிலையில் வினையால் வந்த மெய்யினுக்கு வரும் துக்கமும் (துயரும்) சுகமும் (நலமும்) தொலைந்து (ஒழிந்து) அநாதியாக மறைக்கப்பட்டுள்ள பழைய அறியாமையின் பாற்படும் இருளிலே தங்கிக் கிடத்தலும் நீங்கி, முன்னரும் பின்னருமாகிய முன் பின் நிலைகளும் ஒழிந்து எல்லாமும் (யாவும்) ஆணவமலத் தன்மையேயாக அடைந்து, காதல் செய்யுங் கலாதிகளும் (பஞ்சக் கலைகளுமாம்) போய், அறிந்து கோடற்குரிய அடையாளமும் போய், சிறிதும் ஆன்ம குணம் இல்லாமல் நிற்றல் கேவலாவத்தையின் இயல்பாம். தான் ஏ இவ்விரண்டும் அசைநிலைகளாம்.

(47) கீட்சொன்ன வுபாதி யெல்லாங்
கிளைத்துட னுருவாய் மாய
வாட்கையே சகல மென்று
மறைகணின் றறையுஞ் சுத்தப்
பாக்கியந் தன்னை யுன்னிற்
பகர்ந்திடு மிரண்டுந் தாக்கா
நீக்கமில் பொதுஞா னத்தி
னின்றிடா நிலைமை யாமே.

(இ-ள்) கீழ்சொன்ன—கீட்சொன்னவெனத்திரிபாயிற்ரும். அவத்தை (துன்பங்கள்), அனைத்தும் (முற்றும்). பணைத்து அருவமின்றி வடிவாயுற்று வாழும் மாயவாழ்வே சகலாவத்தை யென்று விதந்து வேதங்கள் நிலைபெற்றுக் கிளத்தா நிற்கும். சுத்தமாகிய பாக்கிய நிலையினைக் கருதுமிடத்து மேற்கூறப்பட்ட கேவலம் சகலம் என்னும் இரண்டும் தாக்காத நீக்கமற்ற பொதுஞானத்தி லன்றிச் சிறப்பு ஞானத்தில் நிற்கும் தன்மைத்தாகும் (எ-று).

(48) தாவில்சிற் குணனுய்த் தன்னைக்
காண்டல்சாக் கிரம தாகும்
மேவுதற் பரையைக் காண்டல்
மிக்கசொற் பனம தாகுஞ்
ஆவிபோய்ப் பரையே யாதல்
சுழுத்தியா னந்த மாதல்
ஓவருந் துரிய மின்ப
வுறுதிதா னதீத மாமே.

(இ-ள்) குற்றமற்ற (அறிவுக் குணனுய்) ஞானமயனுய்த் தன்னை யுள்ளவாறே யுணர்தல் சாக்கிரவவத்தையாகும். பொருந்திய தற்பரையைக் காண்பது மிகுந்த சொப்பன அவத்தையாகும். உயிர் உடன் சென்று, பரையாகிய பொருளில் (தத்துவத்தில்) அதுவாதல் சுழுத்தியவத்தை நிலையாம் இன்பமயமாதல் ஒழிவற்ற துரிய நிலையாம். இன்பமுற்று நின்ற நிலையே அதீதாவத்தை நிலையெனப்படும். ஏ அசைநிலை.

(49) இத்தன்மை நின்மல சாக்கி
ராதியி னியல்பைக் கூறில்
அத்தகு மருளி னுலே
யைவகை மலத்தைச் சொல்லிற்
சித்தெலா மசித்தாய் நீடச்
சிவவிழப் பறிவாய் வாழு
மித்தகையா ணவமா மென்று
ஞானநூல் விதிக்கு மன்றே.

(இ-ள்) இத்தன்மையாக நின்மல சாக்கிராதியின் தன்மையினைக் கூறினால், அத்தன்மையுற்ற கருணையினாலே ஐந்து வகைப்பட்ட மலங்களைச் சொல்லில் (கூறினால்) (ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என்பன பஞ்ச மலங்கள்) அம்மலவயப்பட்டு நின்றவிடத்து சித்துத் (அறிவு) தன்மையெல்லாம் அசித்துத் (அறிவிலது) தன்மையாய், நீடிய அச்சிவத்தன்மை இழந்த பெற்றியால் அறிவாகி வாழும் மித்தை (அஞ்ஞானம்) யாகிய ஆணவமலம் (மூல மலம்) என்று அறிவு நூல்கள் எல்லாம் அறுதியிட்டுக் கூறும். அன்று ஏ அசைகள்.

(50) தன்னிழப் பதுவு முண்மைத்
தனிமுத லிழப்புங் காட்டா
வன்னிலை திரோத மாகுந்
தனுகர ணாதி யாகி
மன்னுயி ரதற்கு மாயை
மயக்கமே போத மாகும்
இன்னிய தன்மா தன்ம
விதாகிதங் கரும மாமே.

(இ-ள்) தன்னையிழந்து நிற்குந்தன்மையும், (தன்வய மற்று நிற்குநிலை) மெய்ப்பொருளாம் முழுமுதலாகிய பர சிவத்தின் இழப்பினையும் (இழப்பு அதன்வயமின்றியிருப்பது) அறிவியாமல் நிற்கும் அந்நிலையே திரோதமலமாகும். (திரோதம்—மறைப்பு) உடம்பு, கருவி முதலியன. ஆதலையுற்று நிலைபெற்ற உயிர்கட்கு மயக்குவிப்பது மாயையெனும் மலமாம். மயக்க அறிவே மாயேயமாகும் (மாயேயம் என்பதும் ஒருமலமாம்) (இன்னிய) இனிய தருமச்செயலும், அதருமச் செயல்களும், இன்பமும் துன்பநிலைகளும் கருமமலமாகும். ஏ அசைநிலை.

(51) ஏகமா மலர்க்கும் மற்றை
யிருமலப் பகுதி யோர்க்கும்
தேகமா திகளுன் காகிச்
சரியைநற் கிரியை சேர்ந்த
யோகமார் நிலையி லின்றோர்க்
குற்றநற் பதங்க ளாகி
யாகமார் சகலர்க் கான
வதோமாயை யனைத்து நீக்கி.

(இ-ள்) ஏகமா மலர்க்கும்—ஒருமலமுடையவராகிய விஞ்ஞானகலருக்கும், ஏனைய இருமலங்களையுடைய பிரளயாகலருக்கும் (தநுகரணபுவன போகங்களாகி) தேகமாதிகள் நான்குமேயாகி சரியாமார்க்கம், கிரியாமார்க்கம் இவற்றுடனுய யோகமார்க்கம் ஆயவற்றின் நின்றவர்க்கு, உற்றநற்பதமாகிய (சாலோகம், சாமீபம், சாரூபம்) முத்திநிலையாகி, மும்மலங்களோடு கூடிய சகலர்க்கு உண்டாகிய அதோமுகமாயைமுற்றும் அறவே களைந்து (என்பதாம்).

(52) மன்னுகா ரணர்க்கு மெய்யாய்
நிற்குமா மாயை யென்று
பன்னுமா மறைகள் பஞ்ச
மலநிலைப் பகுதி தன்னைச்
சொன்னவிம் மலங்கள் ஞானச்
சொரூபமே யாகு லன்றி
யுன்னறி விதனு லீங்கற்
கரிதென வுணர்ந்து கொள்ளே

(இ-ள்) நிலைபெற்ற காரணர்க்கு (மலபரிபாக முற்றவர்க்கு) மெய்மைத் தன்மைத்தாய் பெரிய மாயை நிற்கும் என்று பெருமை பொருந்திய மறைகள் புகலா நிற்கும். ஐந்து வகையாகச் சொன்ன மலங்கள் நிற்கும் வகையினைக் கூறிய இம்மலங்களே அறிவுவடிவமாக ஆகுமேயானுல் அல்லாமல், மாணவக! நீ, உன்னுடைய பாசபசுவறிவு நீங்கற்கு முடியாதென நன்கு அறிந்துகொள்வாயாக; (எ-று)

(53) இவ்வகை மலத்தை நீக்கி
யிறைவனே துக்கி யாகி
யவ்வகை யுயிர்க்கு மூல
வறிவதாய் நின்று வந்த
மெய்வகை தன்மை நிற்க
மேனிதான் உடையார் போலக்
கைவரக் கிடைத்திட் டுனக்
கட்புல னுவ னன்றே.

(இ-ள்) இவ்வகையாகவே, இறைவன் ஆன்மாக்களூற்ற மலப்பிணியை மாற்றி (மலவலிதொலைத்து) அப்பரம் பொருளாகிய இறைவனே அபேதநிலையில் துன்பத்தைக்கூட நுகர்பவனுகி, அவ்வகையில் (துக்கியாகியநிலையில்) அவ்வான்மாக்கட்குக் காரண அறிவதாகவே நிலைபெற்று, தோன்றி வந்த (புலப்பட்டுவந்த) உள்பொருள் (உடல்நிலை) தன்மை நிற்க, மெய்யின் வடிவுடையவர்போலத் தன் வயப்பட்டு (உடைப் பொருளுடைத்தாகித் தன்னகப்பட்டு) ஞானக் கண்ணும் காணுதலன்றி ஊனக் கண்ணுக்கும் (புறக்கண்ணுக்கும் விடயமாக) புலப்படும் தோற்றமுடையவன் (உருவுடையன்) ஆகுவன் என்பதாம். அன்று, ஏ, இவ்விரண்டும் அசை நிலைகள்.)

(54) இருவினை யொப்பிற் சத்தி
நிபாதக்கண் ணீசன் ஞானக்
குருவுரு வாகி வந்து
கூறருங் கருணை கூர்ந்து
அருள்விழிச் சாம்ப வத்தால்
அறிவினுக் கநாதி யான
திரிமல மொழிக்கு ஞான
தீக்கைமேற் செப்ப லுற்றும்.

(இ-ள்) நல்வினை தீவினை யென்றும் இருவினைகட்கும் ஒப்பின்கண் அருட்சத்தி பதியுமிடத்து (நிபாதப்—பதிதல்) எவ்வுயிர்க்கும் இறைவனாகிய பரமேசுரன், ஆன்மா, பாசம், பதி இவற்றின் தன்மையையறிவித்துப் பசுபதியினையடையும் வகையினை யுணர்த்தும் அருள் ஆசிரியனாகி (மாநுடச் சட்டை தாங்கி வந்து), சொலற்கரிய அருட்டன்மை மிகப் பெற்று கருணைப் பார்வையால் செய்யும் சாம்பதீக்கை யெனப்படும் ஞான தீட்சையால் ஆன்மாவிற்கும் அறிவிற்கும் அநாதி யாகிய மும்மல வலி தொலைக்கும் ஞான தீக்கையினைப் பற்றி மேலே தொடங்கல் உற்றும் எ-று. (அநாதி-ஆதியற்றது).

(55) தீர்ந்தபக் குவத்தி லுற்ற
சீடனை யிருத்தி ஞான
வேந்தருள் புரிவா னுன்னில்
வேறற நின்றே யுன்னை
யார்ந்தவிவ் வுடற்க ணிட்டிங்
காட்டுவித் தகப்ப டாமே
சேர்ந்துசேர் வறவே நிற்குஞ்
சிவனைநீ யறிநி யென்றான்.

(இ-ள்) தீர்ந்த — மலவலி தொலைந்த, மலபரிபாக முற்ற நிலையில் (பருவமுற்ற தன்மையில்) நன்மாணாக்கனாகிய சீடனை பாவனையில் இருக்கையில் அமர்த்தி, ஞான வேந்தாகிய பரமாசிரியர், கருணை செய்ய வேண்டுமெனக் கருதினால், தான் தனியாகவே யிருந்துகொண்டு மாணவக! நின்னை யிருவினைகளால் பிணித்த உடலினிடத்துச் செலுத்தி இம் மண்ணுலகில் வினைபோமளவும் நன்னாரிற் பூட்டிய சூத்திரப் பாவைபோல், ஆடும்படிச் செய்து (கூத்தாட்டு வித்து) சிக்கிக்கொள்ளாதவாறு (ஆன்ம, ஞானத்திற்ககப்பட் டுக் கொள்ளாதவாறு உயிர்க்குயிராய் ஒற்றித்தும் ஒற்றியாம லும் (சேர்ந்தும் சேராமலும்) நிலைபெற்றுள்ள சிவ பரம் பொருளை உனக்குள்ளேயே நன்கறிவாய் என்று கூறினான்.

(56) அறிவுமா யகண்ட மாகி
யாதிகர்த் தாவு மாகிச்
செறிவுமா யுன்ற னுவிச்
செம்மாந்த துணையு மாகிப்
பிரியுமா றிலாதான் றன்னைப்
பிறித்துப்பே ரிருளே யாக்கும்
குறியிலா ணவத்தின் செய்தி
கூறநீ கேண்மி னென்முன்.

(இ-ள்) உண்மையறிவுமாய், கண்டிக்கப்படாத பொருளாகி(வரையறை செய்தல்—கண்டம்) முழுமுதற் பொருளுமாகி (கர்த்தா — பசுபதி) ஒன்றுபட்டிருக்கும் தன்மைத்தாகி உன்றன் உயிர் இறுமாந்திருக்குமளவுமாகி (செம்மாப்பு— இறுமாப்பு) "இறுமாந்திருப்பன் கொலோ ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டு" என்பது அப்பர் திருமுறை. உயிர்களோடு பொத்த நிலையிலும் முத்தி நிலையிலும் நீங்கி நிற்றலில்லாதவனாகிய பரம்பொருளை நீக்கி, ஒன்றுமுணரா நிலையாகிய பேரிருளைத் தோற்றும் பெயரினையுடைய மூலமலமாகிய ஆணவ மலத்தின் செய்கையினை நன்கு விளக்கிச் சொல்ல, சீட! நீ கேட்பாயாக என்றுரைத்திட்டான். மின் ஏவல் உணர்த்திற்றும். (எ-று)

(57) என்றபி னிங்கு நின்ற
மலத்தினு லுனையி முந்த
உன்றன துண்மை யும்பின்
னுனதிழப் பாகி நின்ற
துன்றிரு ளதனு லுண்டாந்
துன்பமோ டின்பாற் கூடி
நின்றிடு மாயா பந்த
வுடம்பையா ளிகழ்த்தக் கேணீ.

(இ-ள்) இங்ஙனமாக ஆசாரிய மூர்த்திகள் கூறிய பின்னர் ஆன்மாவினைப் பிணித்துநின்ற மலங்களினால் உன்றன்மை யிழக்கப்பெற்ற உனது ஆன்ம உண்மையும், பின்னர் உன்னுடைய இழப்பாகி நின்ற நெருங்கிய அறியாமையாகி இருளினால் உண்டாகும் துன்பத்தோடும் இன்பினால் பொருந்தி நிலைபெறும் மாயா பந்தத்தாலாகிய உடலின்றன்மையை நான் நன்கெடுத்தியம்ப. மாணவக! நீ, நன்கு கேட்பாயாக, (துன்று இருள்—நெருங்கிய அறியாமையாகிய இருள்) நிகழ்த்தல் — கூறல், இன்ப துன்பம்—நல்வினை தீவினை காரணமாக உண்டாவது. (எ-று)

(58) இன்றள வாக மாயாக்
காரிய வுடம்பி லெய்திப்
பொன்றியும் பிறந்தும் வந்த
பேதைமைப் போக வுன்பால்
ஒன்றிய வருளா லீசன்
உலப்பி லானந்த மெய்தி
நின்றிடா நிலையி லிற்பா
யென்றுதே சிகனி கழ்த்த.

(இ-ள்) இற்றைநாள்வரையுமாக மாயையின்காரியமாகிய உடம்பினிடத்து அடைந்து அழிந்தும் (இறந்துபட்டும்) தோன்றியும் தொடர்ந்துவந்த அறியாமைப்பகுதியானது செல்ல (கடக்க) நின்னிடத்து நன்குகலந்த அருட்டன்மையினால் பரமேசுரன், என்றும் வற்றாத பேரின்பமாகிய ஆனந்தத்தினையடைந்து நிலைக்கப்பெறாத நிலையின்கண் (அஃதாவது பிறருக்கு எய்தப்பெறாத முத்திநிலை) நிலைபெறுவாய் என்று ஆசாரிய மூர்த்திகள் அருளிச்செய்ய (எ-று)

(59) மாணகன் றேசி கன்றன்
வாசகங் கேட்டுச் சொல்வான்
காணலா மோநீர் முன்பு
கட்டுரை செய்த மூன்றுந்

தாணுவும் அறிவும் பாசத்
தன்மையு முன்ற னுள்ளம்
பூணநா முரைப்போ மென்று
தேசிகன் புகலும் போழ்தில்.

(இ-ள்) (அதற்கு) மாணக்கன் ஆசாரியனுடைய அருள் மொழியினைக்கேட்டு வினவுதலைச் செய்வான். என்னையெனில், தேவரீர் அருள்கொடு கட்டுரைத்த மூன்றினையும் காண்டல் கூடுமோ? என்று வினவ, இறையும் (பதியும்) (அறிவும் பசுவும்) பாசமும் (பந்தமும்) ஆகிய மூன்றனுடைய இயலும் உன்னுடைய உள்ளம்பற்ற (மேற்கொள) கூறுவோம் என்று ஆசாரியமூர்த்திகள் உபதேசஞ் செய்யும்போழ்தின் கண். (எ-று)

(60) பரசிவன் ஆன்மாப் பாசம்
எனப்பகர் மூன்றும் யானீர்
தருஞ்சொலே யன்றி வேறு
சலமறக் கண்ட துண்டோ
குரம்பையே காணுங் கண்டேன்
ஆதலாற் குரம்பை தானும்
திருந்தவே யறிவ தெல்லா
முயிருண்டேற் செப்பீ ரே.

(இ-ள்) பதியும், பசுவும், பாசமும் எனக் கூறப்படுகின்ற முப்பொருளும் (திரிபதார்த்தமும்) அடியேன் தேவரீர் அருளிச்செய்யும் உபதேச மொழிகளேயல்லாமல் தனியே அசைவறக் காணப் பெறுவது உள்ளதோ? காயமாகிய குரம்பையே (கூடு) மாத்திரம் காணப் பெற்றேன். ஆகையினுல் உடலந்தானும் தெளிவாக அறியப் பெறுவது முழுதும் (அனைத்தும்) உயிரினியக்கத்தாலன்றித் தானக அறியப் பெறும்; உள்ளதேல் கூறியருளவும். ஏ அசை நிலை. (எ-று)

(61) உடலமே யுணரு மென்னில்
உண்டிடுஞ் சோறு கையாற்
றொடவொணாச் சுட்ட தென்றுங்
குளிர்ந்ததென் றறிந்துந் துய்த்துங்
கடனதாய்ச் செய்த தெல்லாங்
காயமே பரிசித் தன்றோ
சுடுவதென் றதுவும் பின்னர்க்
குளிர்ந்ததென் றதுவுஞ் சொல்லீர்.

(இ-ள்) சரீரந்தானே நன்சாக அறிந்து கொண்டிடும் என்று கூறினல் உண்ணப்படுகின்ற சோருகிய உணவானது. கைகளினல் தொடமுடியாதவாறு சுட்டு விட்டது எனவும், குளிர்ச்சியுற்ற தெனவும், அறிந்து வைத்தும், அநுபவித்தும் (நுகர்ந்தும்) கடப்பாடாகச் செய்தன அனைத்தும், காய மானது (உடலானது) பரிசித்தல்-தொடல்) தொட்டதனல் அல்லவா அச்சோறு சூட்டினையுடையது எனக் கூறியதும், மீண்டும் குளிர்ச்சியினையடைந்தது என்று மொழிந்த அதனை யும் சொல்லுதலைச் செய்யமாட்டீர்! சத்த பரிசரூப சரகந்தங் களுட் காயத்திடமாக நிகழும் பரிச அறிவு கூறப்படுகின்ற தாம் வாயுவின் குணம் பரிசம் என்பது மேலே கூறப்பட்டது. (எ—று)

(62) காயமே யறியு மாகிற்
பிணமானுற் கட்டை யின்கட்
டையாலே மூழ்கும் போது
சுட்டதென் றறிந்து செப்பிப்
போயிடக் கண்ட துண்டோ!
வாதலாற் புந்தி யில்லாய்
காயமோ வறிய மாட்டா
வறிவதொன் றுண்டு காணே

(இ-ள்) ஆசாரிய மூர்த்தியானவர் நன்மாணுக்கனுகிய சீடனை நோக்கி, மாணவக! உடலமானது அந்நிலையினை நன்கு அறியுமேயானல் உயிரற்றபோது அவ்வுடலினுக்கு பிண

மென்று பெயர் சூட்டுவதுமரபு) பிணமாகிய நிலையில் கட்டையின்கட் (விறகினிடத்து) டோன்றி நெருப்பினுலே மூழ்கி, வேகு போழ்து தீயானது சுடுதலைச் செய்கின்ற தென்று கூறிப்போயிடலை இதுவரையிலும் கூறக்கேட்டதுண்டோ. இல்லை இல்லை.

ஆகையினுல் ஒன்றினை யுறுதியாக அறியப்பெறும் அறிவில்லாதவனுகிவிடுவாய்! நீ! உடலங்கள் அறியும் ஆற்றலற்றவையாம். உடலினையியக்கி அறிந்துகோடற்பாலது உடலல்லாத வேறொருபொருள் தனித்துளதெனலை நன்கு அறிந்து கொள்வாயாக. (எ. று.) ஏ—தேற்றம், அசை நிலையாம்.

(63) அசைவினுற் பூதக் கூட்டத்
தறிவெழும் என்போ லென்னின்
நசையில்வெற் றிலையும் பாக்குஞ்
சுண்ணமும் நண்ணுங் காலத்
திசையவாஞ் செம்மை போலும்
இறந்தபோ தறிய வேண்டும்
அசைவற வொன்று போன
போனது வாயுத் தானே,

(இ-ள்) அசைவினுல் பூதங்களுடைய சேர்க்கையினுல் அறிவானது எழுமாம். யாதுபோல என்று வினவிடின், விருப்பின்கண (விருப்பில்லாத) வெற்றிலையும், பாக்கும் சுண்ணும்பும் முகவாசமாக (தாம்பூலமாக) அடைந்துமென்றுதின்றிடும் போது ஒன்றுபடலாகும் செவப்பு நிறம் ஆதலையொக்கும். ஆசையினுல் உயிர்நீங்கிப் பிணமாகிய கட்டையாகிய சமயத்தும் அறியலுறலைச் செய்திடல் வேண்டும், அசைவிலாதவாறு ஒருதன்மையிலதாயிற்று. அப்படிச் சென்றிட்டது வாயுவென்பது ஒன்றேயன்றோ (வாயு பரிசவுணர்வுடையதாகும்) (எ-று)

(64) பிறிந்ததோர் வாயுத் தானும்
பெரியதோ ருறக்கந் தன்னிற்
செறிந்ததோ வில்லை யோதான்
என்றுநீ தெளிந்து செப்பாய்
உறுந்தனி வாயு வுண்டங்
குண்டாகி லுணர்வி லாதாய்
அறிந்திட வேண்டு மெல்லாம்
அறியாமற் கிடப்ப தென்னே.

(இ-ள்) அங்ஙனம் பரிசவுணர்வினுக்குக் காரணமாகிய வளியெனும் பூதமானது (பெரியதோர் உறக்கம்—இறந்து பட்டு மூச்சவிந்திருப்பதாம்) பெருந்துயிலிடத்து படிந் திருந்ததுவோ? இல்லையோ? எனவறிந்து மாணவக நீ! நன்கு விடையிறுப்பாய், என அடைந்திடும் வேறாகிய வளியுளது, என, உளதாகுமேயானால், அறிவில்லாதவனே! அனைத்தும் அறிந்திடல் வேண்டப்பெறும். அங்ஙனமின்றி அறியாமற் கிடப்பதற்கு யாதோ? எவன் என் என ஆயிற்று. ஏ அசை நிலையாம். (எ-று)

(65) அறிவன செவிதோல் கண்ணு
நாசிக ளாந்து மொன்றாய்
அறிவிலாய் துயிலுங் காலத்
தவைகள்விட் டகன்ற துண்டோ!
வறியுமோர் பொறியைத் தாக்க
வறிந்ததே லிறந்த போது
செறிவுளோர் புரட்ட வீழ்த்த
கிடந்தது தேர்ந்து கொள்ளே.

(இ-ள்) அறியப்பெறுவன செவியும் தோலும் (மெய் யும்) கண்ணும், நாவும், நாசியும் என்று கூறுதலைச் செய் தாய். நன்கு அறிவிலாதவனே (மூட) உறங்கிக்கிடக்கின்ற காலத்தவைகளெல்லாம் அறிவுப் பொறிகளாய அவைகள் உடலினைவிட்டு நீங்கினது உளதோ கூறுவாய்.

அறியப்பெறுகின்ற ஒரு கருவியைத் தாக்க (சென்று பொருந்த) அத்தாக்குதலால் அறிந்தது. அப்படியானால் இறந்தபட்டபோது (உயிர் நீங்கினபோது) அறிவுடை மக்கள் அதனைப் புரட்டவும், வீழ்த்தவும், கிடக்கப்பெற்றது. கட்டைபோல இதனை நன்கு தெளிந்துகொள்வாயாக. (எ-று)

(66) அறியுநாற் கரண மென்னிற்
பற்றலிச் சயித்த லாங்குச்
செறியவே யெழுந்தி ருத்தல்
சிந்தித்தல் செய்வோம் நாமென்
யறியமாட் டாது கைத்தல்
ஆதியாய் நான்கும் வேறே
யறிகின்றாற் போலக் கொள்ளாய்
அறிபவன் கரண மன்றே.

(இ-ள்) அந்தக்கரணமாகிய உட்கருவிகள் நான்கும் அறிந்துகோடலைச்செய்யும் என்றால்! பற்றுதலைச்செய்வது (புத்தி) ஆங்குப்பொருந்த முனைந்து எழும்புதலைப்புரிதல் (ஆங்காரம்) சிந்தித்தல் (சித்தம்) ஆயவைகளை நாமே செய்கின்றோம் என அறியலுறலைச் செய்யமாட்டாது செலுத்தல் (உந்துதல்) முதலாகிய நான்கும் தனியாகவே அறிகின்றதைப் போலக் கொள்வாயாக. இவற்றினையறிந்து கொள்பவன் கரணங்கள் (கருவிகள்) அல்ல. ஏ—அசைநிலை. (எ-று)

(67) தெரிதரு கரண நான்கின்
செயலறிந் தோரொன் றாக
உரிமையி லடக்கி யாக்கி
யிவைகளுட் கரண மாக்கி
விரிவுறக் கருவி தன்னிற்
கூட்டியும் மீட்டுந் தானீர்
இருவகைக் கரண மன்றி
யானென தென்ப வான்மா.

(இ-ள்) தெளியப்பெறுகின்ற உட்கருவிகள் நான்கனு டைய செயல்களை நன்கறிந்து ஒவ்வொன்ருகத் தொடர் பினில் அவ்வவற்றிற்குரியவற்றில் கருவிகளையுங் கூட்டுவித் துப் பின்னர் விரிந்த கருவிகளினிடத்துச் சேர்த்தும் மீளவும், அந் நான்கு கருவிகளன்றியான் எனது என்று சொல்லப்பெறு வன உயிர்களேயாம். (எ—று)

(68) யானென தென்ன வான்மா
வில்லைநீ ரியம்புந் தன்மை
தான்மிகு குணங்க ளாமக்
குணங்கடன் தன்மை சாற்றின்
ஊனுடல் சித்த மீரு
யொன்றிய வபிமா னந்தான்
ஈனமி லிராச தத்தி
னியல்பதே யாகு மென்றும்.

(இ-ள்) அகப்பற்று, புறப்பற்ருகியயான் எனது என்று கூற ஆன்மாவானது கிடையாது தேவரீர்! கூறுந்தன்மை (இயல்பு) தான் மிக்க குணங்களின் தன்மைத்தாம். அக்குணங் களின் இயல்பினைக்கூறின் ஊனுகிய உடலானது சித்த தத்துவ மீருய்ப் பொருந்திய அபிமானந்தான் குற்றமற்ற மூவகைக் குணங்களுள் இராசத குணத்தின் இயல்பினையுடை யதே யாகும் எனவும். (எ—று)

(69) ஈங்கிவை யனைத்து நீர்முன்
னிகழ்த்தயான் இசைந்து வந்த
பாங்குசாத் துவித மென்று
பகர்ந்தவை யொழிந்த காலை
யாங்குறு மயக்க மேதாம்
மதமென்று மறிந்த விந்தத்
தீங்குறு குணங்க ளின்றிச்
சேதன மில்லை யென்ருன்.

(இ-ள்) இங்கு இவைகளனைத்தும் தேவரீர் முன்னர் விரிவாகக்கூற உடன்பட்டிசைந்து நல்ல சாத்துவிதமென்று கூறப்பட்டவை நீங்கியபோது அவ்விடமுறும் மயக்கத்தன்மையே தாமதகுண மென்றும் இங்கு அறிந்துகொள்ளப் பெற்ற இந்தத்திய குணங்களில்லாமல் சேதனம் (அறிவு) இல்லை என்றும் கூறுதலைச் செய்தனன். (எ—று)

(70) என்றமா ணகனை நோக்கி
யிறையவ னருளிச் செய்வான்
நின்றமுக் குணத்தின் றன்மை
நீயறிந் திடுகை யாலே
யொன்றுமுக் குணநீ யன்றும்
அவைக்குணர் விலாமை யாலே
சென்றுறு குணியுண் டென்று
தேசிகன் செப்பச் சீடன்.

(இ-ள்) என்று கூறிய மாணவகனை நோக்கிப் பரமாசிரியர் பின்னர்வருவனவற்றைக் கூறுவார். (அருளிச் செய்வான் என்பது சம்பிரதாயமொழி) நிலைபெற்ற இராசத தாமத சாத்துவிதமாகிய முக்குணங்களுடைய இயல்பினைப்பற்றி நீ ஒருமைப்பாட்டுடன் நன்குக அறியப் பெற்றதால் பொருந்தியுள்ள முக்குணமாக நீ இல்லையெனல் பெறப்பட்டதாம். அவைகட்கு அறியுந்தன்மையின்மையினுலே சென்றடைகின்ற குணிப் பொருள் உள்ளதென ஆசிரியன் கூறிடச் சீடனுகிய மாணவகன். எ—று.

(71) நீருரை செய்த விந்தத்
திரிகுண நீக்கந் தன்னிற்
சார்தரு பிராண வாயுத்
தானியங் கிடுத லாலே

சேர்தரு குணங்கள் போகச்
சேடித்த பொருளாய்க் கண்டேன்
ஆர்தரு பிராண வாயு
வதுவொழிந் தறிவ துண்டே!

(இ-ள்) தேவரீர்! திருவாய்மலர்ந்தருளிய இந்தமுக்குணங்களின் நீக்கந்தன்னில் (பிரிவிடத்தில்) சார்ந்திட்ட பிராணவாயுவானது இயங்கப்பெறலால், தானுகவே இயங்குதலால் பிராணவாயுவுடன் சேர்ந்த குணங்கள் பிரிந்து போகப்பெற்றதால் மிச்சமாகி எஞ்சிநிற்பதாக பிராணவாயுவானது, அக்குணமொழிந்து அறியும் பொருளாய் உள்ளதல்லவா ? ஏ — தேற்றம்.

(72) பேசிடும் பிராண வாயு
வறியுமென் றுரைத்த பேதாய்
தேசிலா வுறக்கந் தன்னிற்
பிராணனும் வாயுச் சேர்ந்தங்(கு)
ஊசல்போ லுயிர்ப்ப துண்டோ
வில்லையோ வுண்டுண் டாகில்
நாசியி னுக மேறி
நடத்திடக் கிடப்ப துண்டோ !

(இ-ள்) ஆசாரியர் மாணவகனைப்பார்த்து பேசப்பட்ட பிராணவாயுவானது அறிதலைச் செய்யும் என்று கூறினை ஆகலான் நீ அறிவிலியாகுவை? ஒளியிலா துயில்கையினிடத்துப்பிராணன் ஆகின்ற வாயுவானது சேர்ந்து அவ்விடத்து ஊஞ்சல் போல மூச்சுவிடுவதுண்டோ? இல்லையோ? உள்ளது, உள்ளது. ஆயின் மூக்கினிடமாகச் சென்று உலாவிடக்கிடத்தலைச் செய்யுமோ! கூறு.

(73) இன்னமுங் கேளு மெல்லாம்
வேதிபப் பிராண வாயு
மன்னிநின் றனைத்துங் காணு
மனுதியோ கருவி யாக

உன்னிய பிராண வாயு
　　உடலத்தி லுணரா தென்கொல்
அன்னிய மாகி நான்கும்
　　அடங்கின வாறே காணும்.

(இ-ள்) மேலும் இதன் விவரங்களைக் கேட்பாயாக வேதிபமாகிய பிராணவாயுவானது. வேதிபம்—பேதிக்கப் பட்டது சார்ந்ததன்தன்மைத்தாவது) நிலைபெற்று எல்லாப் பொருள்களையும் காணப்பெறும் மனமாதிகளோ? தத்துவக் கருவிகளாகக்கருதிய பிராணவாயுவானது உடலினிடத்து உணரப்பெறுதது யாதுகாரணமோ? வேறுகி அந்தக்காரணங் கள் நான்கும் அடங்கின தன்மையே யாகும்.

(74) அவனியை யாளு மன்னன்
　　அடல்மத மலைய மர்ந்து (யின்மீது)
பவனிவந் துலாவும் போதிற்
　　பரிகரங் கூடச் செல்லும்
உவமையிற் பிராண னிற்கக்
　　கரணங்க ளொடுங்க வொண்ணு
இவைதனக் குயிர்வேந் தல்ல
　　இவையுயிர்க் கடிமை யன்றே.

(இ-ள்) பூமியினை யொருகுடைக்கீழ் ஆட்சிபுரியும் மாட்சிமையுடைய அரசன், வெற்றி பொருந்திய மதமலை யாகிய யானையில் அமர்ந்து வீதியில், உலாவரும்போழ்து பரிவாரங்களும் படைகளும் கூடவே யேகுகின்ற ஒப்புமை போல பிராணன் நிற்க, கரணங்கள் அடங்கிக்கிடக்க முடியா தாம் (எல்லாம் ஒன்றுபட்டியையும் என்றபடி) இவைகட்கு உயிரானது அரசனுமில்லையாம் இவைகள் உயிரினுக்கு அடிமைப்பட்டவை களுமில்லை. ஏ—அசைநிலை.

(75) ஓதிய பிராண னீங்க
　　வொன்றுமற் றிருந்தோன் றன்னைத்

தீதறத் தெளிந்த வுண்மைத்
தேசிக னருளிச் செய்வான்
ஏதுனக் குற்ற செய்தி
விளைந்ததே தியம்பா யென்ன
மீதுறு மிருளே யன்றி
வேறிலை விளம்பு கின்றான்.

(இ-ள்) கூறப்பட்ட பிராணன் நீங்க (விட்டுவிலக) யாதொன்று மற்றிருந்தவனாகியவனை தீங்கனைத்தும் (அறியாமையெனப்படும் தீமை முழுதும்) விட்டுவிலகித் தெளிவுற்ற மெய்ப்பொரு ளறிந்த ஞானாசிரியர் (கூறுவான்) உபதேசித்தலைச் செய்வார். உனக்கு என்ன செயல் வந்துற்றது. உண்டாயதுஎதுவாம். இவற்றினை யறிந்தவாறே இயம்புவாய்? மேலேவந்தடைந்த அஞ்ஞானவிருளேயல்லாமல் வேறேகிடையாது (ஒன்றுமேயில்லை) என்று கூறுகின்றான் மாணவகன். (எ—று)

(76) ஆதலா லபிமா னங்கள்
அஞ்சுசோத் திராதி யைஞ்சாம்
ஈதிவை யுளதா யிற்றங்
கவைகளெந் நனமோ வென்னில்
ஓதிய பொறிக ளந்தக்
கரணமுக் குணமு யிர்ப்பாய்
நீதக நிற்ற லஞ்சு
நிகழ்ச்சியைஞ் சென்னக் கொள்ளே.

(இ-ள்) ஆதலால், அஞ்சு அபிமானங்களாம், சோத்திராதி ஐந்தாம், இங்கே இவை உண்டாயிற்று அவைகள் என்னதன்மைத் தோவெனில், கூறப்பட்ட இந்திரியங்கள் உட்கருவிகள் முக்குணங்கள் உயிர்ப்பாகி (மூச்சுவிடலாகி) நீ மனிதவகையில் இயங்கல், நிற்றலாகிய தொழில் வகையிலிருத்தல் ஆகிய நிகழ்ச்சி ஐந்தேயாகு மென்று கொள்வாயாக, (எ—று)

(77) ஐவகை யபிமா னங்க
ளாகுநீ நிற்ற லந்தர்
பொய்வகைச் சகல மென்றே
புனிதன தருளாற் கண்டு
செய்வகை யாகி நின்ற
கேவல நான்குஞ் சிந்தித்
துய்வகை யுணர்ந்து கொண்ணீ
கேவலக் கிடையென் றுன்பால்

(இ-ள்) ஐந்து பகுதியான அபிமானங்களாகின்ற நீ நிற்றலும் முடிதலும் பொய்வகையான சகலம் என்றே இறைவனுடைய கருணையினாலே நன்கு உணர்ந்து, தொழிற் படுவகையாகி, நின்ற (சகலத்திற் கேவலம்) கேவலத்தில் மனம் புத்தி சித்தம் அகங்காரங்களாகிய நான்கினையும் சிந்தித்துக் கடைத்தேறும் வகை உணர்ந்துகொள்வாயாக. உன்னிடத்தில் கேவலத்திடையென்றே நீ! அறிக. புனிதன்— தூய்மையான நிருமல வடிவினன். "அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்" என்ற திருத்தாண்டகச் செய்யுளுஞ் சிந் திக்கற்பாலதாம். கிடை—கிடைத்தல். செய்வகையாதல்— தொழிற்படல் கருவிகளுடன். (எ - று)

(78) அஞ்சபி மானம் பஞ்ச
வவத்தைகள் ல .........
............ நான் கொன்று
இடையதா மிதனை விட்ட.
வெஞ்சிய கருவி காலம்
போனதெங் ஙனமோ வென்னில்
வஞ்சக வுடல நீங்கப்
பூதங்க ளுகளு மன்றே.

ஐந்துவகை யபிமானங்களும், சாக்கிரம், சுவப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்துஅவத்தை களும்,............நாலும், ஒன்றும் இடைப்பட்டதாகிய இதனை

ஒழிப்ப, எஞ்சியுள்ளதாகிய கருவியும், காலமும், சென்றது எத்தன்மைத்தோ எனில், உளதுபோலத் தோன்றியழியும் உடலம் ஆன்மாவினை விட்டுப்பிரிய பூதங்களைந்தும் சுழற்சியினையடையும். (அன்றே அசை நிலைகள்) எ-று.

(79) பொறிவிடப் புலன்கள் போகும்
பொழுதெழு கரண மான
வறிவுறு கலாதி யஃகு
மருங்குண மூன்று மஃகக்
குறியுறு மகேச மீசஞ்
சதாசிவங் கூட வாயுப்
பிறியவே விந்துப் பேர்ந்தாற்
பெய்விட நாதம் பேரும்

(இ-ள்) ஐம்பொறிகளும் (மெய், வாய், கண், மூக்கு, செவி யென்பன) நீங்கப்புலன்கள் தொலையும் (சுவை ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன புலன்கள்) அவையற்றுப் போகும்போழுது எழுகின்ற கருவிகளானவற்றினை அறிவுறுக்கின்ற கலை, வித்தை, அராகம் முதலியன ஒடுங்கிடும். அரிய இராசத, தாமத, சத்துவ குணங்கண் மூன்றும் ஒடுங்க. அடையாளமாகின்ற, மகேசம், ஈசம், சதாசிவம் வந்தடையப் பிராணவாயுவும் பிரிவுறலைச்செய்யும், அஃதுபிரிவுற விந்து தத்துவநீங்கும். அஃதுநீங்க நாததத்துவமும் பெயரும் நாதம் விந்து, சத்தி, சிவம் வித்தியாதத்துவங்களும் ஈண்டுக் குறிக்கப் பெறலைக் காண்க. (எ—று)

(80) தத்துவச் சால மிந்தத்
தன்மைகள் கழல மூல
மித்தையா மதீதத் தொன்றும்
விளங்கிய தில்லை யென்ற
வத்தகு மாணன் றன்னை
அண்ணல்பார்த் தருளிச் செய்ய

அத்தகைய யானும் தானும்
அறிவிலா யியம்பக் கேணீ.

(இ-ள்) தத்துவக் கூட்டங்களாகின்ற இந்த இயல்புகளெல்லாம் நீங்கியகாரணத்தால் மூலதத்துவம் பொய்மையாகும்அதீதநிலையில் ஒன்றும் தெளிவதற்கில்லை என்று வினவிய அத்தன்மையுடைய சீடனைநோக்கி அண்ணலாகிய குருமூர்த்தி உண்மைத் தன்மையினை விளக்கியருளவும், அத்தன்மையுடையமாணவகனும் தானுக அறியும் அறிவில்லாதவனுக அறிவில்லாதவனே! நீ! மீளவும் யான் கூறப் பெறலை நன்கு கேட்பாயாக. (எ-று)

(81) பொய்யுடல் பஞ்ச பூதம்
பொறிகர ணங்கு ணங்கள்
பெய்தரு பிராண ஞதிக்
கருவிக ளென்னும் பெற்றி
மெய்யருள் விழியாற் கணடு
விரியிரு ளதீத வீட்டிச்
செய்வினை யுடற்கட் டோயாச்
சின்மய ஞய நீதான்.

(இ-ள்) அழியும்பொய்ம்மையான தூலசரீரத்தையும் ஐம்பெரும் பூதங்களாகிய மண்ணையும், நீரையும், தீயையும் காற்றையும், விண்ணையும், மெய்வாய் கண் மூக்குச் செவி களாகிய அறிவுப் பொறிகளையும், வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தமாகிய தொழிற் பொறிகளையும், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமாகிய புலன்களையும்) மனம்புத்திசித்தம் அகங்காரமாகிய அந்தக்கரணங்களையும் முக்குணங்களையும், இவற்றிடைப்பட்ட கலை, வித்தை, அராகம், புருடன், மான் (காலம்நியதி) ஆகிய பிராணுதிகளையும் இவை அகக்கருவி புறக்கருவியான தன்மையினைத் தேசிகன் அருளினுற்கிட்டிய, உண்மையாகிய ஞானக்கண்ணுற் கண்டு தெளிந்து, விரிந்த இருளாகிய அஞ்ஞானத்தைக்கொன்று,(கெடுத்து) இருவினை

யாற்றோய்ந்த உடலினிடத்துப் பொருந்தப் பெறுத் ஞான வடிவினனாகிய மாணவக நீதான். (எ—று)

(82) தானெனு மவைமுன் னீயாச்
சார்ந்தெழு மபிமா னத்தா
லானபொய் யறிவை மோகச்
சகலமா மறிவாய்க் கண்டிட்
டூனமா ரொழிவிற் போதந்
தன்னையு மொருவி மூலப்
பான்மையா லதித போத
மன்றுநீ யென்று பார்த்து.

(இ-ள்) தான் என்றுரைக்கும் அவற்றின் முன்னர் நீ, தானாகவே பற்றியடைந்திட்டு அதனிடத்தினின்றும் எழா நின்ற அபிமானித்தலால் ஆன பொய்யாகிய உணர்வினை மயங்குதலைப் புரியும் சகலமெனும் அறிவாகப் பார்த்து, தாழ்மையான குற்றந் தங்கிய நீக்கமற்ற அறிவினையும் நீக்கி, காரணத்தன்மையால் அஃது மேலாகிய ஞானம் அன்று என்று கொண்டு நீ அவ்வுண்மையினை யுள்ளவாறறிந்து. (எ-று) அபிமானம்—அறிவு, ஒன்றைத் தன்னுடையதாக நினைத்துத் தனது என்று அல்லது தானென்று கொண்டாடுதல், (செருக்கு) தைசதாங்காரமுமாம். சகலம் -- சகவாவத்தை அஃது ஆன்மாத் தனுகரணாதியோடுங் கூடித் தன்னிச்சா ஞானக் கிரியைகள் ஒருபுடை விளங்குமவதரம்.

(83) போனவை யனைத்தும் நீயாய்ப்
புந்தித்து வந்த போதம்
தானது சகல போகஞ்
சேதனத் தன்மை யன்று
மானவை யொழிந்த போத
மதுவுநீ யன்ற தீதத்
தீனமா மயக்க போதத்
திருளுநீ யல்லை யாகும்.

(இ-ள்) அங்ஙனமாகச் சென்றவைகளெல்லாம், நீயே யாகி நிச்சயித்து வந்த அறிவானது, எல்லா வகையான நுகர் விலும் சென்று துய்க்கப் பெறுதலின் அறிவின் தன்மைய லதுஆம். ஆகிய அவற்றினைவிட்டு நீங்கின அறிவும் நீயாக மாட்டாய், அதீதமாகிய மேனிலையில் இழிவாகிய மயங்குத லைச்செய்யும் அறிவாகிய இருளும் நீயல்லை ஆகும். (நீயாக மாட்டாய் ஆகுவை) அதீதமாவது:—ஆன்மாவில் ஆணவ மலம் பரிபூரணமாயிருக்கும் கேவலாவத்தையாகிய தன்மை யாம். நீக்கமில் "அதீதமாசு நிறைந்த கேவலாமாநீர்மை" என்பது (சிவப்பிரகாசம்) எ—று. துரியாதீதமாவது:— கருவிகளல்லாம் நீங்க ஆணவமலமானது நீங்காதிருக்க மூலா தாரத்திலே புருடனின்ற அவதரம். 'தனி யதீதம் உயிர்க்கு முண்மை யெனவுணர்த்து மன்றே' (என்பது சிவப்பிரகாசம்)

(84) இன்னிலை யிழித்து வந்த
தெவையும்யா னென்ற லானும்
பின்னையென் னுரைக்கி சைந்து
பிராந்திநீ யொழித லானும்
துன்னிரு ளகன்று ஞானச்
சொரூபனீ யாத லானும்
அன்னிலை யாவுங் கண்ட
வறிவதாத் மாவ தாகும்.

(இ—ள்) இந்தத்தன்மையினை நீக்கி வந்தது யாவையும் யானே என்று கருதுதலானும், அதன் பின்னர் என்னுடைய உபதேசமொழிகளுக்கு இணங்கி, மயக்கவுணர்வு நீங்கப் பெற லானும், ஆன்மாவினைப் பணித்திராநின்ற மலவிருளானது, நீங்கப்பெற்று அறிவுவடிவானுக நீயேஆகுதலானும், அந்தத் தன்மைகள் அனைத்தையுங் கண்டுகொண்ட ஞானமே ஆன் மாவாகும் (எ-று)

துன்னல்—நெருங்கல், பிராந்தி—மயக்கவுணர்வு, இழித்து— நீக்கி, இருள்—அஞ்ஞானவிருள்.

(85) அறிவிக்க வறிகை யானும்
அறியாம லிருத்த லானும்
அறிவித்த வறியா மைக்கிங்
கறிவுநீ யாத லானும்
அறிவித்த வென்னை நீயிங்
கருளெனத் தெருள லானும்
அறிவிக்க வறிவா னுய
வறிவதான் மாவ தாகும்.

(இ-ள்) அறிவித்தகாரணத்தால், அறிதலானும் அறிவிக்காதபோது அறியப் பெருமல் இருத்தலானும், அறிவித்த அறியாத்தன்மைநிலைக்கு இவ்விடத்து அறிவே ஆகின்றதாலும், உன்றன்மையினை இன்னவாறென உணரும்படிச் செய்த 'நீ' இங்கறிவுறுத்தியது கருணையேயாகுமெனத் தெளியப்பெறலானும், அறிவிக்கவும் அறிவாகிய அறிவே ஆன்மாவாகும். ஆன்மவடிவமானது :— ஆசிரியருடைய அருளினுலே தன்னையும்தன்னிடத்திலே பந்தமாயிருக்கின்ற தத்துவ விவகாரங்களையும், எவ்விடத்திலும் தோன்ருமல் மறைத்து நின்ற ஆணவமலத்தையும் நீங்கித் தான் அறியும் முறையையும் அவனது ஞானம் அறிவுக்கறிவாய் நின்று உபகரிக்கு முறையும் தன்னறிவிலே விளங்கக் காண்பது "பாயிருள் நீங்கி ஞானந்தன்னைக் காண்டல் ஆன்மரூபம்" (உண்மை நெறி விளக்கம்) (எ-று)

(86) வடிவறும் வடிவி லன்றி
வடிவரு துயிரி னுண்மை
வடிவிலே நின்று லென்றும்
வடிவமே யானுற் போல
வடிவிலா வடிவி னீன்றுல்
வடிவிலா வடிவே யாவை
வடிவிலே நின்று லென்றும்
வடிவரு மதித்துப் பார்நீ.

(வடிவு—உருவம்) (இ-ள்) வடிவமானது ஒழியப் பெறும் உருவில்லாமல், உயிர்களுடைய உண்மைத்தன்மை வடிவம் நீங்காது ஆகவே, உயிர்த்தன்மை உருவத்திலே நிலை பெற்றால் எப்பொழுதும் வடிவத்தன்மையேயாம். அங்ஙனம் உருவமேயாயினும் போல உருவில்லா உருவில் நிலைபெற்றால் (அருவில்) உருவில்லா உருவேயாகுவை! ஆயின், வடிவத்தினிடத்து நிலைபெற்றால், எப்பொழுதும் உருவத்தன்மை நீங்கா. நீ! இவற்றினை நன்கு ஆராய்ந்து பார்ப்பாயாக எ—று. இஃது, நுண்ணுடல் பருவுடல்களின் நிலைமையினை நன்காய்ந்து பார்க்கின் விவரம் நன்குபுலப்படும். எ-று

(87) எண்ணிலுன் னியல்பு தன்னை
யின்னமுங் கேட்டி யாகில்
விண்ணுமுன் கண்ணும் போலும்
என்றுனை விளங்கிக் கண்டிட்(டு)
உண்ணிறை பொருட்கு முன்பால்
ஒன்றிருள் தனக்கு நீயே
கண்ணென வருளாற் கண்டு
காரிருள் கழிய நில்லே.

(இ-ள்) நன்கு ஆய்ந்து உன்னியல்புகளை இனிமேலும் கேட்பாயேயானால், ஆகாயமும் உன்னுடைய கண்களும் ஒக்கும், என்று உன்னை விளங்கிக்கண்டுகொண்டு உள்ளிடத்தே நிறைந்த பொருளுக்கும் உன்னிடத்து பொருந்தியுள்ள இருளுக்கும் (அஞ்ஞான நிலைமைக்கும்) நீ! தானாகவே, அறிவுக்கண்ணென திருவருட் பாங்காற்கண்டு கரிய இருளானது நீங்கிட நிலை பெறுவாயாக (எ-று) ஏ அசைநிலை

(88) என்றுதே சிகனி யம்பி
யிங்குநீ யொழித்த வெல்லாம்
நின்றுபா ரென்ற போது
ஞேயமே யன்றி வேறு

சென்றவப் பொருள்க ளொன்றுங்
கண்டிலே னென்னத் தேவன்
உன்றன தறிவின் மூலி
யொருமுத லிங்குண் டென்றான்.

(இ-ள்) என்று அறிவாசிரியராகிய குருமூர்த்திகள் கூறி இவ்விடத்து உண்மையினை யுள்ளவாறறிந்து மாயா காரியப் பொருள்களை நீக்கிய யெல்லாவற்றினையும், ஒருமுகப்பட்டு நிலைத்துப் பார்ப்பாயாக என்றுபதேசித்தபோது, ஞேயமே யல்லாமல் தனியாகச் செல்லப்பட்ட அப்பொருள்களை மீண்டுங்காணப் பெற்றிலேன் என்றுரைக்கவும், தேவனாகிய பதிப்பொருள், உன்னுடைய ஞானத்தின் மூலகாரணமாகிய ஒப்பற்ற முதல்வன் இங்குள்ளவனே என்று கூறினான். (எ-று)

(89) யாவுமாய் நின்ற போத
மன்றியே யிதற்கு மேலோர்
தேவுள தென்று நின்ற
செவ்வியை யலைக்க வேண்டா
வாவியே கர்த்தா வாகு
மதுகர்த்தா வான தன்மை
நீவகுத் துண்மை யாயே
யெனக்குநீ நிகழ்த்தி டாயே.

(இ-ள்) எல்லாமாய் நிலைபெற்ற ஞானமேயல்லாமல் இதற்கும் மேலே (ஒருபொருள்) ஒருகடவுள் உளது என்று நிலைபெற்ற பருவத்தினை (இயல்பினை) அசைத்துப் பார்க்க வேண்டாவாம். ஆன்மாவே (உயிரே) தலைவனாக ஆவன், அது. தலைமையான நிலைமையினை நீயே, வகைசெய்து மெய்ம்மையாகவே (என்று முளதாந்தன்மைத்தாகவே) அடியேற்குத் தேவரீர் கூறியருளவும். நிகழ்த்திடு பகுதி. ஆய் முன்னிலை விகுதி, ஏ, அசைநிலை. (எ-று)

(90) அறிதரக் கருவி யுண்டிங்
கறிபவ னுன பின்னை
நெறிதரக் கர்த்தா வென்னை
நீயேகர்த் தாவே யானுற்
செறிசுக துக்க மென்ருன்
செய்தவெள் ளாண்மை யுண்டென்
றறிதராய் முற்செய் கன்ம
மதுவாய வார்வூ ணுண்டேல்.

(இ-ள்) அறிதரக் (அறிவதற்கு) கருவிகள் உள்ளது. இங்கு, உணர்பவன் ஆனபிறகு உண்மைநெறியினைத் தருவதற்குக் கருத்தாவாதல் யாது? (எதன்பொருட்டு) நீயே கர்த்தாவே யானுல். நெருங்கிய சுகமும் துக்கமும் உண்டு என்ருன். செய்த (உழவுத்தன்மை) வேளாண்மையுள்ளது (விவசாயம்) என்று அறிதலைச்செய்யமாட்டாய். முற்பகற் செய்யின் பிற்பகல் விளையுமாப்போல முற்பிறப்பின்கண் செய்த கருமாவின் படியே போகபோக்கியப்பொருள்கள் உளவாகும். ஏல்—(ஏற்பர்யாக.) (எ-று)

(91) ஒருவனேர் பொருளை யுன்கை
யுய்த்தன னிரவி லந்தப்
பொருளையோர் கள்வ னெய்திப்
* போதலாற் புலர்ந்த காலை
வெருவர விழிப்ப தன்றி
வேறுண்டோ வுனக்கு மந்தக்
கருவிகள் வசத்த தாகக்
கண்ணுத லடிமை நீயே.

(இ-ள்) ஒருவன் தன்னகத்துள்ள ஒருபொருளை உன்னுடைய கையினிடத்துப் பத்திரமாகக் கொடுத்தனன். இரவின்கண் அப்பொருளை ஒருகள்ளன்வந்து பறித்துக்கொண்டு சென்றிட்டால்பின்னர் விடியற்காலையில் அஞ்சுதக அங்குமிங்

* போர்தலால் (பி. பே.)

கும் விழித்தலேயல்லாமல் தனியாக வேறு உள்ளதோ? உனக்கும் அந்தக் கருவிகள் வயமாக நுதல்விழிநாட்டத்து இறைவனுக்கு நீயே அடிமையாகுவை ! (எ-று)

(92) இன்னுமுன் றன்மை சொல்லில்
இன்பத்துன் பங்கண் மாறி
மன்னிநின் றவைக டுய்க்கும்
வகையின்மேல் வருப நாடாய்
சொன்னநல் லின்ப மொன்றுந்
துய்த்த நீ துன்பந் தன்னை
யன்னிய மாக்கி டாதே
யலந்துநீ யருந்த லென்னே.

(இ-ள்) மேலும், உன்னுடைய இயல்பினைக் கூறிடின், இன்பதுன்பங்கள் மாறுபட்டு நிலைத்து நின்று அவைகளை நுகரும் வகையின் மேல் வருவனவற்றை ஆராய்வாய்! நல்வினைக் கீடாகவந்த நல்லசுகத்தினைமாத்திரம் நுகர்ந்திட்ட நீ! துன்பத்தினை வேறாகக் கருதி விலக்கிடாது வருந்தி மேலும் அத்துன்பத்தினை நீதானாக நுகர்தல் யாது கருதியோ! கூறுவாயாக. (எ-று)

(93) இதற்குவே றுரையொன் றின்றி
யிருந்தவன் றன்னைப் பார்த்திட்
டதற்குவே றுரையுண் டாகி
லறைந்திடா யென்ன வண்ணல்
பதைப்பற விருந்த மாணன்
அறிவிலே பதியைக் காட்டக்
கதித்தெழு மருளா லாங்கோ
ருவமையின் கட்டு ரைப்பான்.

(இ-ள்) இங்ஙனமாகக் கூறும் உபதேசத்திற்குப் பதில் தனியாக எவ்வகையானவுரையாடலுமின்றி வாளாவிருந்தவனாகிய மாணவகனை நன்கு பார்வைசெய்து, கூறியனவற்றிற்குப் பதில் உண்டாயின் கூறுவாயாக என்று தேசிகன் சொல்

லவும், பதைபதைப்பு இன்றிச் சும்மா விருந்த சீடனுடைய ஆன்மாவிலே (ஞானத்திலே) புதியதாக இறைவனைக் காண் பிக்க மிக்கு எழும் கருணை வெள்ளத்தினால் ஆங்கு ஒரு ஒப் பற்ற உவமான முகத்தால் எடுத்துரைப்பானாயினான் (எ-று) கட்டுரைத்தல்-உறுதிமொழியுரைப்பது, உவமை உபமானம் ஒப்புமையான் சாத்ருசியத்தால் என்பன ஒரு பொருள.

(94) இரும்பொடு காந்தக் கல்லின்
இருமுக மொருவ னின்று
பொருந்தவே பிடித்தாற் காந்த
மிரும்பினைப் பொருந்த வாங்கும்
பொருந்திடா தொருவன் வைத்தாற்
போலவுன் கன்மந் தன்னை
வரும்பரு வத்தி லூட்டி
வளர்த்துவா னொருவன் வேண்டும்.

(இ-ள்) கரும்பொன்னாகிய இரும்பு உலோகத்துடன் ஊசிக் காந்தக் கல்லின் இரு முனையினையும் ஒருத்தன் நின்று பற்றும்படிப் பிடித்தால் காந்தமானது அவ்விரும்பினைப் பற்றுற இழுக்கும். அங்ஙனம் பொருந்திடாதவாறு ஒருவன் வைத்தானேயானால் எங்ஙனம் பொருந்துதல் பெறுதோ! அதுபோல உன்னுடைய பழவினையை வரும் பருவத்தில் உண்ணச் செய்து வளர்த்திடுமவன் ஒருத்தன் வேண்டப் படும். காந்தம் இழுக்குஞ் சத்தியுடையது. இரும்பு இழுக் கப்படின் இயங்குதலையுடையது. இரண்டையும் ஒன்றாகச் சேர்ப்பதற்கு ஒருவன் வேண்டப்படும் எனல் கண்கூடு. (எ-று)

(95) என்றவன் றனக்கிங் குள்ள
சுதந்தர வீனந் தன்னை
யொன்றுமற் றிவனே முன்னின்
றுரைத்திட விவனு ரைப்பான்

என்றன துட்பு றம்பா
மிரண்டினி லெவற்றின் பாலீர்
நின்றுணர்த் திடுவீ ரென்ன
நின்மல னருளிச் செய்வான்.

(இ-ள்) என்று அவனுக்கு இவ்விடத்துள்ள தன்வய மாதல் இன்மையைப் பொருந்தப் பெறும். (மற்று—அசை நிலை) இவன் தானே முன்நின்று இங்ஙனமாதலைக் கூற (ஆசிரியன்) இவன் வினவுவான் (மாணவகன்) என்னுடைய அகம் புறம் எனப்படும் இரண்டனுள் எவற்றினிடத்து நின்று தேவரீர் அறிவுறுத்தியருளுவீர்! என்று மீளவுங் கேட்க, நின்மலவடிவினனாகிய குருமூர்த்திகள் கூறியருளுவர், நின்மலம்—தூய்மைத் தன்மை. (எ-று)

(96) உள்ளுமாய்ப் புறத்து மாய்நின்
றுணர்த்துவோ நாமென் றுண்மைத்
தெள்ளிய வருளி னாலே
தேசிக னருளிப் பின்னும்
ஒள்ளிய தன்மை யோடு
முன்னிலை படர்க்கை யுற்றே
நள்ளுற நடத்து வோநா
மென்றவ னவிலுங் காலை.

(இ-ள்) நாம் அகத்திடத்தும் புறத்திடத்துமாய் நிலைத்து அறிவுறுத்துதலைச் செய்வோம், மெய்ம்மைத் தன்மையினை, தெள்ளத் தெளிந்த கருணையினாலே, என்று ஆசாரிய மூர்த்திகள் கூறியருளி மேலும், ஒளி பொருந்திய தன்மையிடத்தும், முன்னிலையிடத்தும், படர்க்கையிடத்தும் அடைந்தோம். மிக நெருங்கியுறச்செலுத்துவோம் என்று அவ்வாசிரியன் கூறுங் காலத்து. (எ-று)

(97) பரவிய தன்மை யாதி
மூன்றையும் பகரு மென்ன
விரவிய விச்சா ஞான
கிரியையுள் விளைத்தல் தன்மை
யுரவுமுன் னிலையு ரைக்கல்
அவனவ ளதுவா யூட்டல்
விரவிய படர்க்கை யிந்த
விரண்டினுந் தட்டா மெய்ம்மை.

(இ-ள்) எங்கும் வியாபித்த, தன்மை முன்னிலை படர்க்கையிடமாகிய மூன்றினையும் கூறியருளுங்கள் என்று விண்ணப்பிக்க, யாண்டும் கலப்புற்ற இச்சை, ஞானம், கிரிகை என்பனவற்றுள் உண்டாக்கல் தன்மையாகும், நேர்முகமாகக் கூறல் வலிய முன்னிலைத் தன்மையாகும், அவன் அவள் அது எனும் மூவகையாய் உண்பித்தல் கலந்த படர்க்கையாகும், இந்த இரண்டிடத்தும் மெய்ம்மை தடுக்கப் பெறமாட்டா (எ—று) இந்த இரண்டு—அகமும் புறமுமாகும்.

(98) முன்புநீ நின்ற வேதத்
தன்மை முன்னிலை படர்க்கை
யென்பதிங் கிவையாய்க் கண்டிட்
டிறையவ னருளி னாலே
யின்புறு முத்திக் கண்ணில்
இவ்வகை மூன்று முன்பால்
துன்பற நடத்துந் தன்மை
சொல்லநீ கேண்மி னென்றான்.

(இ-ள்) முன்னர் நீ நிலைத்த காரணம் ஆவது அந்தத் தன்மையும், முன்னிலையும், படர்க்கையும் என்று சொல்லப்படுவது, இங்கு இவைகளாகிக் காணப்பெற்று, பரமேசுரன் திருவருட்பாங்கினால் இன்பம் அடையப்பெறும் மோட்சம்

பொருந்திடின் தன்மையாதி மூன்றும் உன்னிடத்துத்துன்பம் நீங்க, நிகழ்த்துந் தன்மையினைச் சொல்ல மாணவக! நீ! கேட்பாயாக என்று, உபதேசித்தருளினுன் ஆசிரியன் (எ—று) மின் ஏவல் கண்ணியதாம்.

(99) நீயறச் சிவமாய் நிற்றல்
இடையரு நிகழ்ச்சி தன்மை
யாயமுன் னிலையு ரைக்கில்
அகிலமுஞ் சிவமாய்த் தோன்றல்
மேயவப் படர்கை சொல்லின்
விளம்பிய விரண்டு மொன்ருய்
ஞேயவா னந்தா தீத
நிறைவிலா நிறைவா மன்றே.

(இ-ள்) மாணவக! நீ! யாவுந்தொலையச் சிவமாக நிற்கப் பெறல் இடையறவுபடாத நிகழ்வேயாம். அதுவே தன்மையாகும் அத்தன்மைபோல் முன்னிலையினையுரைக்கில் (கூறினுல்) உலகில் காணப்படும் எல்லாமும் (அனைத்தும்) சிவபரம்பொருளாக, முன்னே காணப் பெறல் முன்னிலையாகும். பொருந்திய படர்க்கையினைப் பகரின் (கூறினுல்), சொல்லப்பட்ட தன்மை முன்னிலைகளாய இரண்டும் ஒன்ருய்க் கலந்த இன்ப மேலீடாக (ஆனந்த அதீதம்) நிறைவு இல்லாத நிறைவாகும். அன்று, ஏ—இரண்டும் அசை நிலைகள். ஆனந்தம்—பேரின்பம், நிறைவுஇலா நிறைவு—பரிபூரணத் தன்மை.

(100) சுரகுரு நிகழ்த்த லாலித்
தொகுதிமுன் கண்டு சென்ற
உரவுறு மாணன் றன்னை
நோக்கியுத் தமனு ரைப்பான்
விரவிய உபாதி நாமுன்
வேறிடக் கூறு செய்த
மரபுனக் கேற வுன்பால்
வாய்த்ததோ வென்ன மாணன்

(இ-ள்) தேவ குருவாகிய ஆசாரிய மூர்த்திகள் கூறப் பெற்றதால் இங்குக் கூறப்பட்ட தத்துக் கூட்டங்களின் தன்மையினைக் கண்டு வந்த ஆன்ம அறிவு, வலிமையுற்ற மாணாக்கனை நன்கு அருட் கண்ணால் பார்த்து மேலானவனாகிய ஆசாரியன் (உத்தமன் — மேலானவன்) கூறுவான். எங்ஙனமெனில், மாணவக! கலந்த (உபாதிகள்) தொல்லைகள், நாம் முன்னர்த் தனியாக ஆமாறு பகுதிப்படுத்திய நெறி முறைமை, உனக்கு அறிவினிடத்தில் தைக்க. உன்னிடத்தில் விளக்கமாகப் பெறப்பட்டதா? என்று வினவ, அதற்கு நன் மாணாக்கனானவன் கூறுவான் (தொடரும்.) (எ-று)

(101) காயநா னன்று பூதக்
கட்டுநா னன்று மன்னை
மேயவைம் பொறிநா னன்று
மிக்கநாற் கரண நானன்(று)
ஏயுமுக் குணம்பி ராணன்
யானுநா னன்று மென்ற
ஞேயமே நீகா ணென்ற
நின்மலா போற்றி போற்றி

(இ-ள்) கூறுகின்றான் எங்ஙனமெனில், உடலமோ, நான் அன்று. ஐம்பூதங்களாகின்ற தொகுப்பும் அன்று. நிலைபெறுதலோடு பொருந்திய அறிவுப் பொறி தொழிற் பொறிகளும் அன்று. (ஞானேந்திரியமும், கர்மேந்திரியமும்) மேம்பட்ட மனம் புத்தி சித்தம் ஆங்காரங்களாகின்ற உட் கருவிகளுமன்றாம். இவைகளுடனாய்ப் பொருந்தும் இராசத தாமத சாத்துவித குணங்கள் மூன்றும், பிராணனும் யானும் (புருடன்) நான் அல்ல. ஆம் என்ற ஞேயமே நீ என்பதனை யறிந்து கொள்வாயாக. (ஞேயம்—சிவ மாந்தன்மையாதல்) என்றருளிச் செய்த நின்மல வடிவமானவனே நினது திருவடிகள் வணங்கக் கடவது. (எ—று)

(102) என்றுவீழ்ந் திறைஞ்சி யெந்தை
யிணையடி தலைமேற் கொண்டு
துன்றிய புளகம் பொங்கக்
கண்கணீர் சொரிய வன்புக்
குன்றுபோல் வளர வுள்ளங்
குதுகுதுத் தழிந்தெ ழுந்து
நின்றவன் றன்னை நோக்கி
நின்மல னருளிச் செய்வான்.

(இ-ள்) என்று கூறிக்கொண்டு கீழே விழுந்து வணங்கித் துதித்து எமது பரம கருணாநிதியாம் குருவாகிய தந்தையின் இரு திருவடிகளையும் சிரசின் மேற்றாங்கிக் கொண்டு, நெருங்கிய புளகாங்கிதங் கொள்ளவும் கண்களினின்றும் ஆனந்த மாரி சொரியவும், அன்பானது மலைபோல் வளரவும், உள்ளமானது குளிரவும், (களிப்பு மீதூரப் பெறல் குதுகுதுப்பாம்) தன் வசமழிந்து எழுந்து நின்ற சோகமுடன் நின்றமாணவகனை ஆசாரிய மூர்த்திகள் கண்ணால் நோக்கி (நின்மலன்—அழுக்கற்றவன்) கூறியருளுவான். (எ-று)

(103) அளவிலா வருளி னாலே
யவன்றனைப் பார்த்து னக்கிங்
குளவெலா மொழித்த பின்னை
யொன்றிமற் றிருந்த செய்தி
தெளிவதா னந்த மாய
சிவம்வினை பூமி யந்தம்
விளைவைநா முனக்கு ரைப்பன்
விரும்பிநீ கேண்மி னென்றான்.

(இ-ள்) அளத்தல் முடியாத கருணையினாலே, அம்மாணவகனைப் பார்த்து, உனக்கு இங்குள்ள மாயா விகாரங்கள் முழுதும் நீக்கிய பிறகு ஒருசிறிதும் (கூடஇல்லாமல்) அற்றிருந்த செயலைத் தெளிவானது ஆனந்தமாகும், அவ்வானந்தமாகிய சிவத்தையும், வினையையும் பூமியையும், அந்தத்தை

யும், உண்டாதலையும், நாம் உனக்குக் கூறுவன், அங்ஙனங் கூறுவனவற்றினை விரும்பிக்கேட்பாயாக' என்றுரைத்தான். (சிவம்விளைபூமியெனவும் அந்தம் விளைவை யெனவும் பாடங் கொண்டு சிவம் உண்டாகும் (உதிக்கும்) இடத்தையும் முடிவில் உண்டாம் பேரின்ப விளைவினையும் எனப் பொருள் கோடல் தகும்)

(104) நீயற நிறைந்து நின்ற
நின்மல போதந் தானே
யாயமெய்ப் பரையா மென்றே
யவன்றனக் ககக்க ணல்கி
மேயநற் கிரியை யிச்சை
யறிவினில் வீடுங் காட்டித்
தோய்வறத் திரோதம் போக்கிச்
சுத்தபூ ரணனாய் வைத்தான்.

(இ-ள்) நீ, நன்றாக நிறைந்து நின்ற தூய்மையான அறிவுத் தானேயாகிய மெய்ம்மையான பரையாகும், என்று கொண்டே அம்மாணவனுக்கு அகக்கண்ணாகிய உள்நாட்டத்தை தந்தருளி. பொருந்தியிட்ட நல்ல கிரியாசத்தி, இச்சா சத்தி, ஞானசத்தி, ஆகிய முச்சத்திகளிலும் வீட்டு நெறியினையும் அறிவித்தருளி, பற்றுத லறத் திரோதமலமாகின்ற மறைப்பினையுந் தொலைத்து, தூய்ம்மையான சிவமாந் தன்மையனாய் வைத்தருளினான் (எ—று)

(105) வைத்தபின் பரைக்கு வேறு
பரையில்லை யென்ன வைத்திட்
டத்தகு பரையே யாக்கி
யநுபவச் செய்தி செய்து
நித்தமா னந்த மான
ஞேயத்தி னுதிப்பித் தங்கண்
உய்த்தபே ரின்பக் காட்சி
யொழித்ததி லழுத்து வித்தான்

(இ-ள்) இங்ஙனமாக வைத்தருளிய பின்னர் பரைக்கு வேறு பரைகிடையாது என்று வைத்தருளி, அத்தன்மையான பரைவடிவேயாக்கியருளி சிவாநுபவமாகிய நற்செயலைச் செய்திட்டு, என்றுமுளதாய் அழிவிலதாய் உள்ள ஆனந்த மான ஞேயத்தினிடத்துத் தோற்றுவித்துத் தம்மிடத்துச் செலுத்தப்பட்ட பேரின்பக்காட்சியாகிய நிலையில் (அல்லன நீக்கி) பதியும்படிச் செய்வித்தருளினுன் (எ—று)

(106) எல்லையில் பரமா னந்த
வின்பத்து ளழுத்தி யந்தம்
எல்லையுங் கீழ மேலும்
நாப்பணு மிழித்திட் டின்ப
எல்லையே வெங்கு மாக
வின்புக்கின் புறவே வைத்துப்
புல்லுத லற்ற வின்பம்
பூரண மாகச் செய்தான்

(இ-ள்) முடிவுவில்லாத பரமானந்த மெனப்படும் பேரின்பத்திடை அழுத்தி, அந்தமும் (முடிவும்) ஆதியும், மேலும் கீழும் நடுவும் ஆயவற்றினை யகற்றிட்டு. இன்ப முடிவே (வரம்பே) எங்குமாக (வியாபகமாக—நிறைந்ததாக) இன்பத்திடத்து இன்புறுதலேயாக வைத்திட்டு போய்ப் பொருந்துதல் அற்ற (இல்லாத) வந்தடைந்த நிறைந்த இன்ப மாம் வண்ணம் செய்தருளினுன். (எ—று)

(107) ஓரின்ப மான விந்த
வொழிவிலா நிறைவு தானும்
பேரின்ப சத்தி யாநீ
பெற்றதுஞ் சத்தி முத்தி
பேரின்பா தீத மாய
பெருமைப்பே றிரண்டு மற்றுச்
சீரின்ப மயமாய் நின்ற
செய்திநீ யெய்தி டென்றான்.

(இ-ள்) ஒப்பற்ற ஒரே இன்ப வடிவமான நீக்கமற்ற பரிபூரணந் தானும் பேரின்பச் சத்தியாக நீ அடைந்திட்டதும், சத்திமுத்தி பேரின்பு அதீதம் எனும் பெருமையும் ஆகிய இரண்டு பேறுகளும் தொலைந்து போகச் சிறந்த இன்மயமாய் நின்ற செயலை நீ! அடைந்திடுவாய் என்றருளினான். (எ-று)

(108) தன்னையும் தன்ன தோராத்
தன்மையு மொருதன் மைத்தாய்த்
தன்னறப் பெற்றோர் காணத்
தாவில்பே ரின்ப சத்திக்
கன்னிய மாயி னோர்கள்
ஆதலால் இன்பா தீத (ம்)
உன்னிலே பெற்றா லன்றி
யுற்பவ முனக்க றாதே

(இ-ள்) தன்னையும், தன்னதாகிய நிலையை ஆராயாத இயல்பையும், ஒரே வியல்பாய்த் தன்னிலே தானே நீங்கப் பெற்றவர்கள். அகக்கண்ணால் கண்டிடலைச்செய்யக் கேடில்லாத (அழிவில்லாத) பேரின்பமாகிய, சத்திதனக்கு வேறாகப் பெற்றவர் (ஆயினவர்) ஆவர். ஆகையினால், இன்பமெனப்படும் பேரின்ப நிலையாகிய அதீதமானது உன்னிடத்திலேயே பெற்றால் அல்லாமல் உதித்தல் (உற்பவம்) உன்னிடத்து நின்றும் நீங்கவே கூடாது—(எ—று)

(109) ஒன்றுமற் றிரண்டு மற்றங்
கொன்றிரண் டதுவு மற்று
நின்றுநீ யழுந்த லற்று
நீயல தானு மற்று
சென்றுநீ சிவமாந் தன்மை
சிவநீயாந் தன்மை தானும்
அன்றியா ணவமி லாத
வாணவ ராகி நில்லே.

(இ-ள்) ஒன்றும்அற்று நின்றநிலைஅத்துவிதநிலை, இரண்டும் அற்று—துவிதநிலை, ஒன்றுஇரண்டதுவும்அற்று-சுத்தாத்து விதநிலையாகிய நீ மாணவக! நீ இந்நிலைகளில் நிலைபெற்றுப் பதிதலும் நீங்கி, நீ அல்லாததாகிய தானும் நீங்கப்பெற்று, பாசவலியும் பசுநிலையும் கெட்டுச்சென்று நீ சிவமாகிய நிலைமையும், சிவமே நீயாகிய நிலைமையும், ஆகிய அதுவும் அல்லாமல்ஆணவச்சேட்டையற்ற ஆணவமுடையவராக நீ நிற்பாயாக. (எ—று)

> ' அதுவே தானே யாகிய அந்நெறி
> ஏக ளுகி யிறைபணி நிற்க
> மலமாயை தன்னெடும் வல்வினை யின்றே.'

என்ற சிவஞான போதமுஞ் சிந்திக்கற்பாலது. பசுவினிற் கலந்த ஆணமலவலி நீங்கப்பெற்று; சீவபோதங்கெட்டுச் சிவபோதமானவழி உண்டாம் முனைப்புக்கு ஆணவமற்ற ஆணவம் என்ற நாமம் உண்டெனை அறிதல் வேண்டும்.

(110) சுகிசுக மிரண்டு மற்ற
சுகாதீத வுண்மை தன்னிற்
றகுசிவம் பெறுவான் பாசங்
கெட்டவன் சைவ னன்றே
மிகுஞ்சிவ விளைவு தேவாம்
விளைவுக்கு விளைவி லாத
பகுதிநீ பாச மென்மேல்
பரபோக முடிவி லாவை.

(இ-ள்) (சுகிபண்பி, சுகம்பண்பு) பண்பும் பண்பியும் ஆகியஇரண்டும் அற்ற சுகஅதீதமாகிய மெய்ம்மைப் பொருளில், தக்கசிவமாந்தன்மைப் பெறுமவன் எவனே அவனே, பாசவலியறவே நசிக்கப் பெற்றவனுகுவன். அவனே சிவசம்பந்தமுடையவன் (சைவன்) ஆகுவன் அல்லவா, (ஓ வினுப்பொருளது) மிகுதியும் சிவத்தன்மை யுதிக்கப்பெறலே தேவநிலையாம். அங்ஙனமுண்டாதற்கு வித்தாகாத விளைவுக்கு

விளைவாகாத மூலப்பகுதி நீ யாகுவை, பாசம் மேலும் மேலும் உண்டாதல் பரபோகமாகிய முடிவிலா நிலைமை யாம் (எ-று)

பரபோகம் என்றாலும் சிவபோகம் என்றாலும் ஒன்றே யாம், பாசம்—பந்தம், சிவனிடத்துண்டாம் பாசமே பரபோக மாதலையுணர்க என்பதாம், முடிவிலாமை—அந்தமின்மை. (அந்தமில்லாதது)

(111) மும்முத லித்தங் காண்டல்
முடிவிலா முதனீ யாகும்
செம்மைகா ணென்ன வைத்துச்
சிவமுனைக் கெழும லுற்று
மெய்ம்முத னியாய் நிற்றல்
வீட்டியச் சிவமாய் வாழ
விம்முத லிழப்பு நாரு
திருப்பதே யின்பா தீதம்.

(இ-ள்) மூன்று முதலாகிய பொருள்களை அழிவிலதா கக் காணப் பெறல், அந்தமிலாத முதலாம். நீயே யாகின்ற நேர்மையாகிய செம்மையினைக் காணப் பெறுவாயாக என்ன அதனிடைப்பதிய வைத்துச் சிவமானது உன்னைப் பொருந்து மாறு நிற்றல் மெய்ம் முதலாம். நீயேயாகி யிருப்பதைக் கெடுத்து எஞ்ஞான்றுமொருபெற்றியாய்ச் சிவமாகி வாழ்வ தற்கு இம் முதலானது இழக்கப் பெறலும் தோன்றாது இருத்தல், இதுவே, இன்பாதீதமாகும் (பேரின்ப நிலையாம்) (எ-று)

(112) சித்திலே சிவமொ டுங்கச்
சிவத்திலே சித்தொ டுங்க
வுய்த்தவிவ் விரண்டு மற்ற
வுண்மையே வுண்மை யாக்கி

அத்தகு சிவமே வாழு
மதுவுன துண்மை யென்றே
வித்தக வேத சைவம்
மயக்கற விளம்பு மன்றே.

(இ-ள்) சித்துப் பொருளிலே சிவமானது அடங்கிட வும், சிவத்திலிடத்தே சித்துப் பொருளானது அடங்கிடவும் இங்ஙனஞ் செலுத்தப்பட்ட இவ்விரண்டு பொருளும் அற்ற சிவோகம் பாவனை பண்ணலாகிய உண்மை நிலையே மெய்ம் மைப் பொருளாக்கி அந்த மேம்பட்ட சிவ நிலையே வாழப் பெறுமதுவே நினது உண்மை நிலையாகும் என்று சதுரப் பாடுடைய வைதீக சைவமானது அறிவிடைப் பெற்ற மயக்க வுணர்ச்சியானது நீங்கிட விளக்கமுறக் கூறிடலைச் செய்யும். (எ-று)

(113) இவனவ னாகுந் தன்மை
யெய்துமற் றின்பா தீதம்
அவனிவ னாகுந் தன்மை
யதுவுமற் றளவி றந்த
அவனவ னாகுந் தன்மை
யவன்றனிற் கண்ட வுண்மை
யவன்அவ னாகா முத்தி
யதுசிவ முத்தி யாமே.

(இ-ள்) இவன் (இந்தச் சீவன்) அச் சிவனாகுந் தன் மையினை யடையப்பெறும். அதுவும் நீங்கப் பெற்று இன்பா தீதம் ஆகும். அச் சிவன் இச் சீவனாகின்ற தன்மையாயதும், நீங்கப் பெற்று, எல்லை கடந்த அவன் அவனேயாகின்ற நிலை மையினை அச் சிவன்றனிற் கண்ட மெய்ம்மையே அவன் அவனாகா முத்தியாம். அதுவே சிவமாந் தன்மைப் பெருவாழ் வாகிய சிவமுத்தியாம்.

சீவத்தன்மை நீங்கிச் சிவத்தன்மை யெய்துதலேயன்றி, சிவம் சிவமாதல் கூடாது. சிவம் எப்பொழுதும் ஒரு பெற்

றித்தேயாம், பாசவறிவும் பசுவறிவுங் கெட்ட நிலையாம் பசுவானது பதித்துவம் அடையும் என்பதாம். (எ-று)

(114) அப்பொரு ளிருந்த தன்மை
யதுமுதல் துவிதங் கூறின்
அப்பொரு ளுதய மூன்று
மதுவதற் கின்மை நான்காம்
அப்பொரு ளறிவு வீட
லஞ்சாவ தறையுங் காலை
அப்பொருட் களவு காணு
வநுபவ வளர்ச்சி யாமே.

(இ-ள்) அந்தப்பொருளானது இருந்தபடியே இருந்த இயல்பானது முதலாம் (ஒன்றும்) "ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க" எனும் திருவாசக அடியினையுங்கொண்டு துணிக, இரண்டாவது கூறிடின் அச்சிவபரம்பொருள் தோன்றலையாகும் மூன்றுவது கூறின் அதற்கு இலதாந்தன்மையாகும் நான்காவதுநிலை யறிவுறுத்திடின் அப்பொருளது ஞானம் விடல் ஆகும். ஐந்தாவது நிலை அறையுங்காலத்து (கூறுமிடத்து) அப்பொருட்கு எல்லைகாண முடியாத அநுபவம் எழுந்து வளர்தலே யாகும். (எ-று) ஆகும் என்பது ஆம் எனவாயது (அநுபவம்—சிவாநுபவம்)

(115) அநுபவந் தனுவ தாகி
யழியுமாப் போற்சி வன்பால்
அநுபவ மந்த நாளைக்
கழிவுகைம் மாற தாக்கி
அநுபவ காயங் கொண்டே
யநுபவ விழப்பு வாழ
அநுபவப் புலவி யாரு
ரருணிலைக் குரியோர்க் காமே.

(இ-ள்) அநுபவமானது (ஒன்றன் வழியாக உண்டாவது நுகர்வு) உடலினையுடையதாகிப் பின்னர்க் கட்டுக் குலைந்து அழிகின்ற நிலைபோல சிவபரம்பொருளிடத்து உண்டாகும் அநுபவமானது, கூடுகின்ற அந்தக்காலத்துக்கு அழிந்திடலைப் பிரதிப் பிரயோசனமாகச்செய்து அவ்வநுபவ நிலையினை காயத்திடமாக்கொண்டே அவ்வநுபவ நிலை இழத்தல் சிவமாந்தன்மைப் பெருவாழ்க்கை வாழ்ந்திடஅநுபவநிலையினை புலத்தலானது ஆருவது ஆகும் இந்நெறி நிறைந்த கருணை நிலைக்குரிமை பூண்டவர்க்காகிடும். எ—று.

(116) வெற்றுட றிரிந்து போக
மேலொடு கீழு மற்றுச்
சுற்றொடு நடுவு மற்றுச்
சுகபரி பூர ணத்தே
யுற்றிட லொழித லற்றிங்
குலப்பிலா னந்த மாய
தற்பர மொழிந்து நிற்பர்
தற்பர மொழிந்தோர் தாமே.

(இ-ள்) வெறுமையான உடலானது கெட்டு ஞான சுஞ்சு கியாகி சிவபோகமானது மேலும் கீழும் நாற்புறமும் நடுவிடமும் நாமரூபங்கள் கெட்டு, நீங்கி, வியாபகமாகி பரி பூரணமாகிய சுகத்தினை யுற்றடைதலும் ஒழிதலும் நீங்கி (நீக்கமறநிலைத்து) இங்குக்கெடாத ஆனந்தமாகிய தற்பர நிலையினைச் சிந்தித்து நிற்பர். தன்வசமிழந்த ஞானபரமாயுள்ள பெரியோர்; எ—று.

(117) சீலமெய்த் திருவே டத்தின்
செய்தியுஞ் சிவால யத்தின்
பாலுறை வடிவுந் தன்பால்
பயன்படுஞ் சிவமாய்க் கண்டிட்(டு)

ஓலமிட் டுருகிக் கண்ணீர்
ஒழுகநெக் குநெக்கு முட்சோ
கோலமே கோல மாவர்
குறைவிலா நிறைவி னூரே.

(இ-ள்) நல்லொழுக்கமும் நற்பண்பும் உடையஉண்மை யான திருவேடத்தின் பொலிவுடைச் செயலும், சிவபெரு மான் திருக்கோயிலின்கண் அருள்கொண்டு எழுந்தருளி யுள்ள திருவுருவமும், பந்தபாசத்தடையற்ற முத்தான்மாவா கிய தன்னிடத்தில், அருவும் உருவும் அருவுருவுமாய ஞானமே திருமேனியாகவுடைய முத்திப்பயனாகத் தோன்றப் பெறும் பரசிவமாகவே காணுதலைப் பெற்று, இதுகாறும் பாசஞானத்திலும் பசுஞானத்திலும் சிக்குண்டு ஆணவமல முனைப்பால் நின்ற வென்னையு மோர்பொருளாகக் கொண்டு கருணையாலே தடுத்தாட் கொண்டு பதிஞானந்தந்தருளிய பெருமானே அபயம் அபயம் என்று கூவுதலைச் செய்தும் அன் பால் உருகுதலையுற்றும், கண்களினின்றும் ஆனந்த (பாட்பம்) நீர் சொரிய நெக்குவிட்டும் நின்றபோது "நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே, புக்குநிற்கும் பொன்னார் சடைப் புண்ணியனாகிய சிவத்தின் அருள்வடிவே வடிவமாகுவர்." அவர்தாமே குறைவிலா நிறைவினையுடையராம் (எ-று)

" செம்மலர் நோன்றாட் சேர லொட்டா
அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே"

எனுஞ் சிவ ஞா ன போதப் பன்னிரண்டாஞ் சூத்திரப் பொருளே இப்பாட்டின் பயனாகக் கோடற்பாலதாகும்.

சீலம்-ஒழுக்கம் இவ்வொழுக்கம் அடியவராகிய நிலையில் ஒழுகும் ஒழுக்கமாம்.

''ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்'' என்பது வள்ளுவர் வாய் மொழி. உயிரினும் விழுமிதாகிய ஒழுக்கமுடையவர்தம் சிவ வேடப் பொலிவே திருவேடமாகும். இவ் வேடமுடையார் தம்மைச் சிவபெருமானின் வேருகக் காண்டல் கூடாது. வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்'' என்பது திருமந்திர மாகும். சிவம் என்பதற்கு மங்களம், ஐசுவரியம், ஆக்கம், அழகு, நலம் எனப் பல பொருளாம். சிவனெனு நாமந் தனக்கேயுடைய செம்மேனி யெம்மான் எழுந்தருளியுள்ள திருக்கோயிலின்கண் எழுந்திட்டருளிய சதாசிவத்திரு மேனி யாகிய சிவலிங்க வடிவினைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி யோதுவார்தமை நன்னெறிக்குய்க்கு நாத னுமமாகிய நமச்சிவாயத்தைச் செப்பி வழிபடல் வேண்டுமெனல் குறிப்பிடப்படுகின்றது.

''விறகிற் றீயினின் பாலிற் படுநெய்போன்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோனட்டு உணர்வு கயிற்றினுன்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே''

என்ற அப்பர் திருவாக்கின்படி மறைய நின்றருள் மாமணிச் சோதியினைச் சிவமாய்க் காணல் வேண்டுமெனல் புலப்படுக் கப்படுகின்றது.

'' ஊனினுள் உயிரை வாட்டி
உணர்வினூர்க் கெளிய ராகி
வானினுள் வானவர்க்கும்
அறியலா காத வஞ்சர்
நானெனிற் றூனே யென்னும்
ஞானத்தார் பத்தர் நெஞ்சுள்
தேனுமின் னமுது மானூர்
திருச்செம்பொன் பள்ளி யாரே ''

என்ற திருநேரிசைப் பாசுரமும், கருதத்தக்கதாகும். குறைவிலா நிறைவு—பெருநிறைவு. அஃதாவது பரிபூரண மாம். "குறைவிலா நிறைவே கோதிலா வமுதே" என்பது திருவாசகம் முடிவினில் சிவமாந்தன்மைப் பெருவாழ்வெய் தும் பெற்றியுரைக்கப்பட்டது.

(118) முடிவறு முடிவில் வைத்த
முன்னவன் பாதம் போற்றி
யடியொடு முடிவி லின்பா
மருளருட் சரணம் போற்றி
வடிவெடுத் தென்போல் வந்த
வளர்பெருங் கருணை போற்றி
படிமிசைப் பயின்ற வுண்மைப்
பதாம்புயம் போற்றி போற்றி.

(இ-ள்) அந்தமில்லா அந்தத்தின்கண் வைத்தருளிய முன்னைப்பழம் பொருட்கு முன்னவனாகிய முதல்வனே வணக்கம், ஆதியும் அந்தமுமில்லா இன்பமாகின்ற பெருங் கருணை வடிவானவனே நினது கருணைத் திருவடிகட்கு வணக்கம். மானைக்காட்டி மானைப்பற்றுவது போல மக்கட் சட்டகந்தாங்கி யடியவனை வலிய வந்தாண்டுகொண்டருளிய பெருங்கருணைத் திருவுருவானவனே வணக்கம். இம்மண்ணு லகின்கண் வந்தருளியுள்ள மெய்ம்மையாகிய செந்தாமரை மலராகிய திருவடிகட்கு வணக்கம் உரித்தாகுக. (எ-று)

ஞானசாரம் மூலமு முரையும்.

முற்றிற்று.

---

சிவஞானபோதமூலம்.

# மெய்கண்ட தேவரருளியது.



## காப்பு

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

1 அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

2 அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

3 உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

4 அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

5 விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

6 உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

7 யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

8 ஊம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதற் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

9 ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

10 அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடும் வல்வினை யின்றே.

11 காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

12 செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

சிவஞான போதச்சூத்திர மூலம்.

முற்றும்.

**சிவமாகிய பதிஇலக்கணமாவது:—**

1 பலகலையா கமவேதம் யாவையினுங் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே யதுதான்
நிலவுமரு வுருவின்றிக் குணங்குறிக ளின்றிக்
நின்மலமா யேகமாய் நித்த மாகி
அலகிலுயிர்க் குணர்வாகி யசல மாகி
யகண்டிதமா யானந்த வுருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே

(சிவப்பிரகாசம்)

**ஆன்மாவாகிய பசுவிலக்கணமாவது:—**

2 எண்ணரிதாய் நித்தமாய் இருண்மலத்தி னழுந்தி
யிருவினையின் றன்மைகளுக் கீடான யாக்கை
அண்ணலரு ளானண்ணி யவையவரா யதனல்
அலகினிகழ் போகங்க ளருந்து மாற்ருற்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்
புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கா லருளால்
உண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப் பாத
முற்றிடுநற் பசுவர்க்க மெனவுரைப்பர் உணர்ந்தே

**பாசமாகிய மலங்களின் இலக்கணம்:—**

3 ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருளொளிர விருண்ட
மோகமாய்ச் செம்பிலுரு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதான சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வரது பரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையா னடிகள்
நணுகும்வகை கருணைமிக நயக்குந் தானே

**தீக்கை யறுவகைப்படும்:—**

நோக்கான் மாயை பரிசத்தா
 னுண்மை வினைமந் திரச்சொல்லாற்
றுக்குஞ் சுத்த மாயையது
 தியானந் தன்றற் சாருமலம்
பார்க்கு மிகுபா வனையாலே
 பகைத்த திரோதம் யோகத்தாற்
றேக்கு மான்ம போதமிவை
 சேரக் கழலுங் கண்டீரே



உ

திருச்சிற்றம்பலம்

# ஞானசாரம்

## மூலமும் உரையும்

## செய்யுள் முதற்குறிப்பகராதி

## இகரம்



## ஈகாரம்



## உகரம்



## எகரம்

## ஏகாரம்



## ஐகாரம்



## ஒகரம்



## ஓகாரம்



## ககரம்



## கா



## கீ

### பி



### பே



### பொ



### போ



### ம



### மா



### மி

---

## தாதமார்க்கம்

தாதமார்க்கஞ் சாற்றிற் சங்கரன்றன் கோயிற்
றலமல கிட்டிலகு திருமெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந் தார்மாலே கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதிறிரு விளக்கிட்டுத் திருநந்த வனமும்
செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வ
தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியும்
இயற்றுவதிச் சரியைசெய்வோ ரீசனுல கிருப்பார்

## புத்திரமார்க்கம்

புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானுஞ்
சோதியையும் பரவித்தா வகித்துச் சுத்த
பத்தியினு லருச்சித்துப் பாவிப் போற்றி
பரிவினெடு மெரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலுமிக் கிரியையினே யியற்று வோர்கள்
நிலமன்றன் னருகிருப்பர் நினையுங் காலே

## சகமார்க்கம்

சகமார்க்கம் புலனெடுக்கித் தடுத்துவளி யிரண்டும்
சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்கள்
அகமார்க்க மறிந்தவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்துண்
முகமார்க்க வமுதுடல முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைக
ளுகமார்க்க வட்டாங்க யோக முற்று
முழத்தலுழந் தவர்சிவன்றன் னுருவத்தைப்
பெறுவர்.

## சன்மார்க்கம்

சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்க டாம்பலவு முணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
ஞேயமொடு ஞாதிருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் கானே !

உ
திருச்சிற்றம்பலம்

# ஞானசாரம்.

## பிழைதிருத்தம்

| பிழை | திருத்தம் | பக்கம் | வரி |
|---|---|---|---|
| மளம் | மனம் | 2 | 22 |
| படிலே | படலே | ,, | 22 |
| ஓடுங்கிடும் | ஒடுங்கிடும் | ,, | 26 |
| ஞானமிலாத | ஞானமில்லாத | 26 | 11 |
| ஆவிபோப்ப் | ஆவிபோய்ப் | 28 | 14 |
| மாசிய | மாகிய | 33 | 19 |
| பொத்த | பெத்த | 33 | 16 |
| பின்கண | பின்கண் | 37 | 22 |
| துயிலிலிடத்து | துயிலிடத்து | 38 | 12 |
| சுழம்சி | சுழற்சி | 46 | 5 |
| பொழுது | போழ்து | 46 | 17 |
| அணணலாகிய | அண்ணலாகி | 47 | 7 |
| அந்தக்காணங் | அந்தக்கரணங் | 47 | 26 |
| கருவிகளல்லாம் | கருவிகளெல்லாம் | 49 | 12 |
| மூலா | மூலா | 49 | 12 |
| த்ததுக்கூட் | தத்துவக்கூட் | 59 | 3 |
| பேரின்பு | பேரின்ப | 63 | 4 |
| பேரின்ப சததி | பேரின்ப சத்தி | 63 | 10 |
| சித்தாப் | சித்துப் | 66 | 7 |
| முட்சோ | முட்சேர் | 69 | 3 |
| கானடல் | காண்டல் | 70 | 6 |
| முடிவறுமுடிவில | முடிவறுமுடிவில் | 71 | 7 |
| ஆண்மா | ஆன்மா | 74 | 12 |